உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப்பத்திரிகை.

"எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.

தொகுதி-௩௮.] விக்கிரம ஷூ பங்குனி மீ [பகுதி-௫.
Vol. 38. March—April 1941. No. 5.

உள்ளுறை.



...

பத்திராசிரியர்—திரு. நாராயணையங்கார்.

வருஷம் ஒன்றுக்கு ரூ 4.] [தனிப்பிரதி அணா—8.

வெளிநாடுகளுக்கு ரூ 4—8—0.

1941.

Printed by Srimathu R. Shanmuga Rajeswara Naganatha Sethupathy Avl., and Published by Thiru. Narayana Iyengar at the Tamil Sangam Power Press, No. 54, Tamil Sangam Road, Madura.

# ஒரு வேண்டுகோள்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதமொருமுறை வெளிவரும் இச்செந்தமிழ்ப்பத்திரிகையில் வெளியிடுமாறு பொருளுரைகளும் மதிப்புரைவேண்டிப் புத்தகம் முதலியனவும் அனுப்புவோர் அவற்றைப் பத்திராசிரியர், செந்தமிழ், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும்,

செந்தமிழில் வெளியிடுமாறு அனுப்பும் விளம்பரங்களையும், பாண்டியன்புத்தகசாலைக்கு நன்கொடையாக அனுப்பும் புத்தகம் முதலியவைகளையும், செந்தமிழ் செந்தமிழ்ப்பிரசுரங்கள் தமிழ்ச்சங்கப் பிரசுரங்கள் சங்கக்கலாசாலை சங்கப்பரீக்ஷைகள் முதலியவை சம்பந்தமாக அனுப்பும் கடிதங்கள் மணியார்டர்கள் முதலியவற்றையும், இன்னும் இச்சங்கசம்பந்தமாயறியவிரும்பியெழுதும் பிறவற்றையும் மானேஜர், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும் அனுப்புமாறு இதன்மூலம் கேட்டுக்கொள்ளலாயிற்று.

லக்ஷ்மீநாராயணையர்,

மானேஜர்.

---

## மதுரைத்தமிழ்ச்சங்கத்தில் விற்கப்பெறும் புத்தகங்கள்.

### I. சங்கப்பிரசுரம்.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஞானமிர்த மூலமும் உரையும் ... ... | 1 | 0 | 0 |
| 2. | சைவமஞ்சரி ... ... ... | 1 | 8 | 0 |
| 3. | *யாப்பணியிலக்கணங்கள் ... ... ... | | | |
| 4. | வைத்தியசாரசங்கிரகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 5. | பன்னூற்றிரட்டு ... ... ... | 3 | 0 | 0 |
| 6. | மகாபாரதம் அரும்பதவுரையுடன் ... ... | 4 | 0 | 0 |
| 7. | *தோத்திரத்திரட்டு ... ... ... | | | |
| 8. | *தமிழ்ச்சொல்லகராதி உயிர்வருக்கம் முடிய. முதற்பாகம். | 6 | 0 | 0 |
| | *ஷை இரண்டாம்பாகம் ... ... ... | 4 | 8 | 0 |
| | ஷை மூன்றாம்பாகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 9. | *அபிதானசிந்தாமணி ... ... ... | | | |
| 10. | தொல்காப்பியம் செய்யுளியல் (நச். உரை முதலிய) ... | 1 | 12 | 0 |
| 11. | திருவருணைக்கலம்பகம் ... ... ... | 0 | 6 | 0 |
| 12. | அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ் ... ... | 0 | 8 | 0 |
| 13. | கலைசைச்சிலேடைவெண்பா ... ... | 0 | 6 | 0 |
| 14. | *தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி ... | | | |
| 15. | திருவாரூர் நான்மணிமாலை ... ... | 0 | 4 | 0 |
| 16. | ஸ்ரீகிருஷ்ணசரித்திரவிமர்சம் ... ... | 1 | 4 | 0 |
| | பன்னூற்றிரட்டு (செலக்ஷன்) ... ... | 0 | 4 | 0 |
| | திருவாலவாய்த் திருநீற்றுப்பதிகம் முதலியன ... | 0 | 1 | 0 |

---

உ
கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி–௩அ.] விக்கிரம ஷூ பங்குனி மீ [பகுதி–ரு.
Vol. 38. March—April 1941. No. 5.

## நாடும் நகரும்

[பிரபுத்தபாரத ஆசிரியர் ஸ்ரீ. சுவாமி விபுலாநந்தாவர்கள்.]

பெருங்காப்பியத்திற்கு இலக்கணங்கூறிய தண்டியாசிரியர்,

'மலைகடல் நாடு வளநகர் பருவம்
இருசுடர்த் தோற்றமென் றினையன புனைந்து'

என்றார்.

'அலையாழி மேன்மை யருட்புயலின் செய்கை
மலையாறு நாடூரின் வண்மை—தொலையா
இருசுடரின் றோற்ற மிருதுவளம் பானம்
பொருபுனல்புக் காடல் பொழில்'

என மாறனலங்காரம் கூறும்.

ஐம்பெருங்காப்பியங்களுள்ளே தலைமைபெற்ற சீவகசிந்தாமணி உதித்தகாலத்திலே* வடமொழிமரபு தமிழிலே இடையீடின்றிப் புகுந்து வழங்குவதாயிற்று. சமணமுனிவருட் பலர் இருமொழியிலும் சிறந்த பாண்டித்தியம் படைத்தவராயிருந்தனர். வடமொழி அலங்காரசாஸ்திரம் வகுத்த இலக்கணமனைத்தும் நிரம்பிய சீவகசிந்தாமணி அன்றுமுதல் இன்றுவரை கற்றோர்சிந்தையைக் கவருமியல்பினதாயிற்று. அக்காலத்திற்குப்பின்பு எழுந்த காப்பியங்கள் நாட்டுவருணனை, நகரவருணனையளவிலே சீவகசிந்தாமணியைப் பின்பற்றுவவாயின.

* இது கி. பி. பத்தாம்நூற்றாண்டென்பது அறிஞரது முடிபு.

சிலப்பதிகார மணிமேகலைகள் எழுநூற்றாண்டுக்குமுன்பு உதித்தவாயினும், அடிபலவாக நடக்கும் ஆசிரியப்பா, கலிப்பா விணலமைந்தமையின் பின்பற்றுதற்கு அரியவாயின.

நான்கடிச்செய்யுளால் முதலிலேநடந்த தொடர்நிலைச்செய்யுள் சீவகசிந்தாமணியேயாம். திருத்தக்கதேவரது செய்யுள்நடையைப் பின்பற்றிக் கந்தியாரென்பார் நானூற்றுக்குமேற்பட்ட செய்யுட்களைச் சீவகசிந்தாமணியினுள்ளே நுழைத்துவிட்டமையை நோக்கும்போது இந்நூலினைப் பின்பற்றுதல் எளிதென்பது தெளிவாகின்றது.

சிலப்பதிகாரம் தனது முப்பது உட்பிரிவுகளுள்ளே க0-ஆம் கச-ஆம் உட்பிரிவுகளாக நாடுகாண்காதையையும் ஊர்காண்காதையையும் அமைத்துச்செல்லுகிறது. (மாறனலங்காரம் 'நகர்' என்னுது 'ஊர்' என்பதை நோக்குக)

நாட்டுவருணனையும் நகரவருணனையும் காப்பியமெனவழங்கும் தொடர்நிலைச்செய்யுளில்மாத்திரமல்ல, அடிபலவாகநடந்த மதுரைக் காஞ்சிபோன்ற தனிச்செய்யுட்களினும் அடியளவாற் குறுகிய பிற தனிச்செய்யுட்களினும் நின்று அழகுபயப்பன. இவ்வழகு எவ்வெக்காரணங்களான் ஆயிற்று என ஆராய்ந்துணர்வதே இப் பொருளுரையின் நோக்கமாகும்.

அழகு அனைத்தும் இன்பந்தரும் நீர்மைய என்பதை முன்னர்க் காட்டினும். ஏனைய மெய்ப்பாடுகளும் அழகுவாய்ந்துநிற்பவாயினும் மக்கள் அழகினை அவாவுவது பெரிதும் இன்பப்பொருட்டேயாம்.

'செல்வம் புலனே புணர்வுவிளை யாட்டென்
றல்லல் நீத்த உவகை நான்கே'

என ஆசிரியர் தொல்காப்பியனர் இன்பச்சுவைக்கு இலக்கணங் கூறுகின்றார்.

ஆசிரியர் திருவள்ளுவனர் நாட்டிற்குக்கூறிய இலக்கணத்தினுள்,

'தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு'

'பிணியின்மை செல்வம் விளைவின்ப மேமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து'

என்பவை கூர்ந்துநோக்கத்தகும்.

இன்பச்சுவைக்குக்கூறிய இலக்கணத்தை யொருபுடையாக வும் நாட்டிற்குக்கூறிய இலக்கணத்தை ஒருபுடையாகவும்வைத்து ஒப்புநோக்குவோமாக. செல்வம் இரண்டினும் உளது. புலன் என்பது கல்விப்பயனாகிய அறிவுடைமை; தக்கோர் என்போர் அறவோர், துறவோர், அந்தணர் முதலியோர். தக்கோரைக்கூறவே புலன் கூறியதாயிற்று.

'செற்ற நீக்கிய மனத்தின ரியாவதும்
கற்றோ ரறியா அறிவினர் கற்றோர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர்'.

எனும் நக்கீரனாருரையையும் நோக்குக.

நாட்டிற்குரிய அழகுகளுள் இன்பம் என்றது விழவும் வேள்வி யும் சான்றோரும் உடைமையானும், நுகர்வன உடைமையானும், நில நீர்களது நன்மையானும் வாழ்வார்க்கு உண்ணிகழும் மகிழ்ச்சி யாம். இன்பச்சுவையுட் கூறிய புணர்வும் விளையாட்டும் இதனுள் அடங்குவ.

இங்ஙனம் நோக்குமிடத்து இருபுடையும் ஒத்துநிற்றல் காண் கின்றோமாதலின், நாடு இன்பத்திற்கும் அழகிற்கும் நிலைக்களமென் பது பெறப்பட்டது. தள்ளாவிளையுள், பிணியின்மை, ஏமம் என்பன இன்பநுகர்ச்சிக்குத் துணைக்காரணமாவன.

'இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணும் நாட்டிற் குறுப்பு'

என்றமையின் நாட்டுவருணனையானது மழைவருணனை, ஆற்று வருணனை, மலைவருணனை, அரண்வருணனை எனும் இவைதம்மை யும் உறுப்பாகக்கொண்டுவருமென்பது பெறப்படுகின்றது.

ஏமாங்கதநாட்டினதுவளத்தைக் கூறுவானெடுத்துக்கொண்ட தேவர் அந்நாடு கல்விகேள்விகளான் விழுப்பமெய்திப அரசனை யுடையது என்பதை முதலிலே தெரிவிக்கின்றார்.

'ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு'

எனத் திருவள்ளுவனர் கூறினாராதலின், வேந்தமைவு நாட்டுக்கு இன்றியமையாததொன்றும்.

'நாவீற் றிருந்த புலமாமக ளோடு நன்பொற்
பூவீற் றிருந்த திருமாமகள் புல்ல'

என்றமையின் தக்காரும் தாழ்விலாச் செல்வரும் அந்நாட்டிலுளர் என்பது குறிப்பிடப்பட்டது; அரசன் நாமகளும் திருமகளும் நாடோறும் வெறுப்பின்றிப் புல்லும்படி வீற்றிருந்தானென்னவே, அவன்வழி நின்ற குடிகளும் அந்நீர்மையாராமென்பது போதரும்.

மேலும் தேவர் நாட்டுவளங்கூறிய செய்யுட்களுள், ஈற்றில் நின்ற செய்யுளிலே ஏமாங்கதநாடு வீடுபேறுகருதித் தவஞ்செய் வார்க்கும் இடம், மறுமைகருதி இல்லற நடாத்துவார்க்கும் இடம், நற்பொருளைப் பயக்குங் கல்வியைக் கற்பார்க்கும் இடம், நிலையாத பொருட்செல்வத்தைத் தேடுவார்க்கும்இடம் என்னும் பொருள்தர,

'நற்ற வஞ்செய் வார்க்கிடம் தவஞ்செய் வார்க்கு மஃதிடம்
நற்பொ ருள்செய் வார்க்கிடம் பொருள்செய் வார்க்கு மஃதிடம்'

எனக் கூறித் தக்காரும் தாழ்விலாச் செல்வரும் அந்நாட்டில் உள்ளனர் என்னும் உண்மையினை வெளிப்படுத்தினர். தெங்கு, கமுகு, மா, பலா, வாழை செறிந்துநிற்றலின் பிறதேயத்தினுள்ளா ரும் விழையுந்தரத்ததாய், இசையால் திசைபோயது இந்நாடு.

மழைபெய்தல், புனல்பரத்தல், உழவருழுதல், கடைசியர் நாற்றுநடுதல், கள்ளுண்டு மகிழ்தல், நெல்லரிதல், போர்குவித்தல் என்னுமிவற்றைக் கூறுஞ்செய்யுட்களும், கரும்பு, இளநீர், வெற் றிலை, பழம், கடல்வளம் இவற்றைக் கொண்டுசெல்லும் பண்டிகளைக் குறிக்குஞ் செய்யுட்களும், மயில், குயில், அன்னம், வாளைமீன், மேதி, அடிசிற்சாலை என் றின்னவற்றைக்கூறுஞ் செய்யுட்களும் தள்ளாவிளையுளினது நிறைவினையும் செல்வவளத்தினையும் காட்டுவ.

பின்னுளிலெழுந்த காப்பியங்களும் புராணங்களும் திருத்தக்க தேவர் காட்டியவழியிற் செல்வனவேயாம்.

தேவர் நகர்வளங்கூறியமரபினை ஒரு சிறிது ஆராய்ந்துணர்வாம். 'முனிவரது தவப்பயன்போலே செல்வமோங்கிய இராசமாபுரத்தின் நிறைவுகூறுவாம்' என எடுத்து, முதலிலே நகரினைச் சூழ்ந்த பொழிலின்வனப்பைக் கூறுகின்றார். அதன்மேற் கன்மதிலின் உட்புடைநிலையிலேயமைந்த யானைக்கூடம், தேரேறுமிடம், குதிரையேறுமிடம், வாட்டொழில் விற்றொழில் செய்யுமிடம் என்னுமிவற்றைக்கூறி, இடைநகர்ப்புறமாகிய மருதத்தைக் கூறுகின்றார். பதினெட்டுப்பாடைமாக்களும் ஈண்டி நிறைதலால் எழுந்த ஓசையும், மகளிரது ஊடல்தீர்க்கும் ஆடவரது செய்கையும், செல்வமிகுதியும், பிறவும் இடைநகர்க்குரியவாகக் கூறப்பட்டன. அதன்பின்பு தாமரைக்கிடங்கின் இயல்பும் நீராடுவோர் செய்கையும் கூறிக் காவன்மதிலினையும் அதன்மீதியைந்த பலவகை இயந்திரப் பொறிகளையும் கூறுகின்றார். மதிலின் நான்கு வாயில்களையும் கூறி, உள்நகரத்திலே பரத்தையரிடத்தைக் கூறுகின்றார். சிலம் பொலியோடே கலையொலி யாழொலி பாட்டொலி குழலொலி முழவினொலியாகிய ஒழியா ஒலிகளினாலே இச்சேரிக்குத் துறக்கமுமொவ்வாதென்கின்றார். அதன்மேல் அங்காடித் தெருவினியல்பைக் கூறுகின்றார். அதன்மேற் பீடிகைத் தெருவொழிந்த ஏனைய வீதிகளினியல்பும் தாழ்விலாச் செல்வரது போகநுகர்ச்சியும், விழவும், வேள்வியும் பிறவும் கூறி மன்னவனது கோயிலியல்பு கூறுகின்றார். செய்குன்றும், சுனையும், மலர்க்காவும், குயிலொலியும், வண்டினது ரீங்காரமும், பந்தாடுபூமியும், மாடமும், கூடமும், நாடகசாலையும், திருக்கோயிலும் பிறவும் கூறுகின்றார். பிற்காலத்திலெழுந்த நூல்கள் இம்மரபையே பெரிதும் பின்பற்றுவன.

வனப்புமிக்க இம்மரபினைத் தேவர் தாமாகவே படைத்துக் கொண்டாரா? அன்றேல் தமக்கு முன்னிருந்த புலவரது நூலிற் கண்ட மரபினைப் பின்பற்றினரா? என்பது அடுத்த வினு. முன்னோராகிய மாங்குடிமருதனர் மதுரைக்காஞ்சியிலே பூம்பொழிலும் பொழிற்புறத்தமைந்த பெரும்பாணிருக்கையும், மணிநீர்க் கிடங்கும், பல்படைப்புரிசையும், போர்க்கதவும், மேகமுலாவும்

மலைபோலோங்கின மாடமும், வையையாறுபோன்று இடையறாது வழங்குதலையுரிய வாயிலும், தெருவும், மனையும், பகற்கடைத்தெருவும், மாலையிலே கூடும் கடைத்தெருவும், யானையும் தேரும் புரவியும் களமர் செருமயக்கமும், கல்லாமாந்தரது காமநுகர்ச்சியும், அறங்கூறவையமும், மன்னவன்கோயிலும், மன்னவன்செயலும், மாந்தர்செயலும் என்றின்னவற்றையெல்லாம் அழகுறக் கூறியிருப்பதினாலும், இளங்கோவடிகள் ஊர்காண்காதையினும் பிற இடத்திலும் காவற்காடு, அகழி, மதில்வாயில் என்றின்னவும், எண்ணெண் கலையோரர்கிய பரத்தையர்வீதியும், பலவகைத் தொழிற்சாலையும், சந்தியும், சதுக்கமும், ஆவணவீதியும், மன்றமும், கவலையும், மறுகும், அங்காடிவீதியும், அறுவைவீதியும், கூலவீதியும் என்றிவை தம்மையும் கூறியிருத்தலினாலும், திருத்தக்கதேவர் முன்னோர் மொழிப்பொருளைத் தொகுத்தும் வகுத்தும் வேண்டுவன சேர்த்தும் சொல்லின்பமும் ஓசையின்பமும் நிறைந்த நான்கடிச்செய்யுளாலே நலம்பெறத் தமது நூலினை யாத்துத் தமிழர்க்கு இனிய விருந்துநல்கினரென அறிகின்றோம்.

சீவகசிந்தாமணியிலும், சிலப்பதிகாரத்திலும், மதுரைக்காஞ்சியிலுமிருந்து சில அழகிய செய்யுட்களையும் செய்யுட்பாகங்களையும் தந்து இப்பொருளுரையைமுடிப்பாம்.

'காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகினெற்றிப்
பூமாண்ட தீந்தேன் றொடைகீறி வருக்கை போழ்ந்து
தேமாங் கனிசிதறி வாழைப் பழங்கள் சிந்தும்
ஏமாங் கதமென் றிசையாற்றிசை போய துண்டே' (சீ-சி–31.)

'சொல்லரும் சூற்பசும் பாம்பின் றோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற்
கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே' (சீ-சி–53.)

'காவி யன்ன கண்ணினார் கயந்தலைக் குடைதலின்
ஆவி யன்ன பூந்துகி லணிந்த வல்குற் பல்கலை
கோவை யற்று திர்ந்தன கொள்ளு நீர ரின்மையின்
வாவி யாவும் பொன்ன ணிந்து வானம் பூத்த தொத்தவே'
(சீவகசிந்தாமணி–67.)

'கண்வலைக் காமுக ரென்னு மாபடுத்
தொண்ணிதித் தசைதழீஇ யுடலம் விட்டிடும்
பெண்வலைப் படாதவர் பீடி ஞேங்கிய
அண்ணலங் கடிநக ரமைதி செப்புவாம்' (சீ-சி–78.)

'பொற்சிறு தேர்மிசைப் பைம்பொற் போதகம்
நற்சிறு ரூர்தலி னங்கை மார்வீரீஇ
யுற்றவர் கோழிமே லெறிந்த வொண்குழை
மற்றத்தே ருருள்கொடா வளமை சான்றவே' (சீ-சி–89.)

'வரிவளை யரவமு மணிமுழ வரவமு
மரிவளர் கண்ணிய ரணிகல வரவமும்
புரிவளர் குழலொடு பொலிமலி கவினிய
திருவிழை கடிமனை திறவிதின் மொழிவாம்' (சீ-சி–124.)

'வைத்த பந்தெ டுத்தலும் மாலை யுட்க ரத்தலும்
கைத்த லத்தி ஞேட்டலும் கண்ணி நெற்றி தீட்டலும்
பத்தி யிற்பு டைத்தலும் பைய ரவ்வி ஞடலும்
இத்தி றத்த பந்தினோ டின்ப மெல்லை யில்லையே' (சீ-சி–151.)

'பெற்ற செல்வம் பிறழா வாழ்க்கைப்
பொற்றொடி மடந்தையர் புதுமணம் புணர்ந்து
செம்பொன் வள்ளத்துச் சிலதிய ரேந்திய
அந்தீந் தேறல் மாந்தினர் மயங்கிப்
பொறிவரி வண்டினம் புல்லுவழி யன்றியும்
நறுமலர் மாலையின் வறிதிடங் கடிந்தாங்கு
இலவிதழ்ச் செவ்வாய் இளமுத் தரும்பப்
புலவிக் காலத்துப் போற்று துரைத்த
காவியங் கண்ணார் கட்டுரை யெடுக்குநர்
நாவொடு நவிலா நகைபடு கிளவியும்
அஞ்செங் கழுநீ ரரும்பவிழ்த் தன்ன
செங்கய னெடுங்கட் செழுங்கடைப் பூசலும்
கொலைவிற் புருவத்துக் கொழுங்கடை சுருளத்
திலகச் சிறுநுத லரும்பிய வியரும்
செவ்வி பார்க்குஞ் செழுங்குடிச் செல்வரொடு
வையங் காவலர் மகிழ்தரு வீதியும்' (சிலப்பதிகாரம்–14.)

'செந்நீர்ப் பசும்பொன் புனைந்த பாவை
செல்சுடர்ப் பசுவெயிற் றோன்றி யன்ன
செய்யர் செயிர்த்த நோக்கினர் மடக்கண்
ஐஇய கலுழு மாமையர் வையெயிற்று
வார்ந்த வாயர் வணங்கிறைப் பணைத்தோட்
சோர்ந்துகு வன்ன வயக்குறு வந்திகைத்
தொய்யில் பொறித்த சுணங்கெதி ரிளமுலை
மையுக் கன்ன மொய்யிருங் கூந்தல்
மயிலிய லோரு மடமொழி யோருங்
கைஇ மெல்லிதி னொதுங்கிக் கையெறிந்து
கல்லா மாந்தரொடு நகுவனர் திளைப்பப்
புடையமை பொலிந்த வகையமை செப்பிற்
காம ருருவிற் றும்வேண்டு பண்ணியங்
கமழ்நறும் பூவொடு மனைமனை மறுக
மழைகொளக் குறையாது புனல்புக மிகாது
கரைபொரு திரங்கு முந்நீர் போலக்
கொளக்கொளக் குறையாது தரத்தர மிகாது
கழுநீர் கொண்ட வெழுநா ளந்தி
ஆடுதுவன்று விழவி னுடார்த் தன்றே
மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல்'.

(மதுரைக்காஞ்சி 410–429.)

---

௨

# கம்பராமாயணசாரம்

[தமிழ்ப்பெருங்கவி, முதுபெரும்புலவர்,

ஸ்ரீ. ராவ்சாகிப் வே. ப. சுப்பிரமணியமுதலியாரவர்கள், G.B.V.C.]

கசூஉ-ஆம் பக்கத் தொடர்ச்சி.

## அனுமான் மும்மூர்த்திகளையும் வணங்கல்

மேருமலைமீதுற்ற அனுமான், அங்கே, 'நாவலந்தீவு' என்பதற்குக் காரணமான தெய்வீக நாவல்மரத்தைக் காணலானான். அந்த மலைக்குமேலே உலகங்களெல்லாவற்றையும்படைத்த பிரமதேவனுடைய நகரத்தில் அந்தத் தேவன் பூவணைமீது பொலியக் கண்டு கைகூப்பித்தொழுதான். பின்பு, வானவர் வணங்க, முனிவர்கள் வேதம் ஓதித் துதிக்கப் பூதேவி பூமிதேவி யிருவருடன் வீற்றிருந்த மூலமூர்த்தியான திருமாலைநோக்கி வணக்கஞ்செய்தான். ]

148 ஆயதன் வடகீழ்ப் பாகத் தாயிர மருக்க ரான்ற[1]
காய்கதிர் பரப்பி[2] யஞ்சு கதிர்முகக் கமலங் காட்டித்
தூயபே ருலக மூன்றுந் தூவிய மலரிற் சூழ்ந்த
சேயிழை [3]பாகத் தெண்டோ ளொருவனை வணக்கஞ் செய்தான்.

கொண்டுகூட்டு: ஆயதன் (அந்த மேருமலையின்) வடகீழ்ப்பாகத்து ஆயிரம் அருக்கர் ஆன்ற காய்கதிர் பரப்பி அஞ்சு கதிர்முகக்கமலங் காட்டித் தூயபேருலகம் மூன்றும் தூவிய மலரிற் சூழ்ந்த சேயிழைபாகத்து எண்தோள் ஒருவனை வணக்கஞ்செய்தான்.

பொருள்: (பிரமவிட்டுணுக்களைச்சேவித்த அனுமான்) அந்த மேருமலையின் (ஈசானதிசையென்ற) வடகீழ்ப்பாகத்திலே ஆயிரம் சூரியர்களுடைய கிரணங்களை (ஒருசேர) வீசி, ஒளிபொருந்திய ஐந்து (செந்)தாமரை (மலர்போன்ற) திருமுகங்களின் காட்சி அளித்து, மூன்றுலகத்துள்ள தூயோர்கள் (ஆன தொண்டர்கள் பூசைசெய்யும்போது) அருச்சித்த பூ(க்குவியல்) சூழ விளங்கப் பெற்ற(வனும்) உமாதேவியை ஒருபாகத்தேயுடைய(வனுமான) ஒப்பற்ற (பரமசி)வனை வணக்கஞ்செய்தான்.

ஆயதன் - அதன். அருக்கர் - சூரியர். ஆன்ற - அகன்ற - விரிந்த. ஆன்ற என்பதற்குச் சிறந்த என்றும் பொருள்கூறுவர். காய் - (இருளைக்) கோபிக்கின்ற. கதிர் - கிரணம் - ஒளி. கதிர்முகம் - ஒளியையுடையமுகம். கமலம் - தாமரை. தூய - பரிசுத்தமான. பேருலகம் - பெரிய உலகம். உலகம், உலகத்துள்ளோரை உணர்த்தியது. தூய, என்பதனை உலகத்துள்ளோர்க்கு அடையாக (-விசேடணமாக)க்கொண்டு பொருளுரைக்கப்பட்டிருத்தல் காண்க. செம்மை - சிவப்பு. இழை - ஆபரணம். 'செம்மை இழை' என்பது 'சேயிழை' என் ஆயிற்று. சேயிழை - சிவந்த (பொன்னாலாகிய) ஆபரணத்தையுடையாள் (ஆன உமை).

இப்பாட்டு, சிவனைப்பற்றி உயர்ந்த மதிப்பும் ஆழ்ந்த பக்தியும் உண்டாக்கும் பாட்டுக்களுள் ஒன்ருகவுள்ளது.

பாடபேதம்: [1] அருக்கர்க்கான்ற, அருக்கர்கற்றை. [2] பரப்பில். [3] சேயிதழ்.

அனுமான் அட்டதிக்குப்பாலகரைக் காணல்

[அனுமான், பின்பு, தலைக்குமேலே வெண்கொற்றக்குடை விளங்கப் பக்கத்திலே தேவமாதர் சாமரைவீசத் தேவர்கள் அடி தொழ வீற்றிருந்த தேவேந்திரனைக் கண்டு தொழுதான். அதன் பின், மேருவின் எட்டுப்புறங்களிலுமுள்ள அட்டதிக்குப்பால கரைக் கண்டான்.

அனுமான் உத்தரகுருவென்ற வடபூமியை அடைதல்

அப்பால், அவன், மேருவைக் கடந்து, வடபூமியாகிய உத்தர குருவை அடைந்தான். அடைந்தபோது, அங்கே, சூரியன் காணப் பட்டு இருள்நீங்கிப் பகலாகவிருப்பதைக் கண்டு* திகைத்து,

* சூரியன் தினமும் மேருமலையை வலமாகச் சுற்றிவருகிறதென்றும் அப்படி வலம்வருகையில் அந்தமலைக்குத் தென்பக்கத்தில் கிழக்குத்திசையிற் ருேன்றும்போது உதயகாலமென்றும், மேற்குத்திசையை அடைந்தபோது அத்தமனகாலமென்றும், இதற்கு மாருக அந்தமலைக்கு வடபக்கத்தில் உள்ளவர்க்கு, அது (சூரியன்) மேற்கே தோன்றும்போது காலையும் கிழக்கே அடையும்போது மாலையும் ஆகுமென்றும் புராணங்கள் கூறும். பூமி, நித்தம் ஒருமுறை தன்னைச் சுற்றிக்கொண்டு ஆண்டுக்கொருமுறை சூரியனைச் சுற்றுகிறதென்றும், பூமி தான்சுற்றுகையில் சூரியவெளிச்சம்படுமிடத்தில் பகலும் படாத இடத்தில் இரவுமாயிருக்குமென்றும் பூமி சூரியனைச் சுற்றிவருகையில் சூரியனது வெயிலின் உறைப்பு வித்தியாசத்தால் இளவேனில் முதலிய பருவங்கள் எற்படுகின்றனவென்றும் வானசாத்திரம் கூறும்.

'விடிந்திட்டதே! என் விரைவு வீணாயிற்றே! விடியுமுன் மருந்தைக் கண்டு கொண்டுபோய், எம்பிரான் எழுந்திடுமுன் இறந்தாரைப் பிழைப்பித்து, அவன் வருத்தத்தை நீக்கநினைத்தற்கு விரோதமாகச் சூரியோதயமாய்விட்டதே! யாதுசெய்வேன்!' என்று வருந்தினன். வருந்தியவன், 'மேருவின் வடபாகத்தில் சூரியன் மேற்கே உதிக்குமென்று மேலோர் சொல்லியிருக்கிறார்கள். ஆதலால் (தென்பாகத்துள்ளார்க்கு) இன்னும் இரவு கழியவில்லை' என்று நினைந்து வருத்தம்நீங்கினன்.

## அனுமான் மருத்துமலையைக் காணல்

ஆண் பெண் என்ற பிரிவின்றி இரண்டுருவமும் ஒன்றுசேர்ந்த உடலினராய், முடிவில்லாத வாழ்நாளுடையராய், உடம்பேயன்றி உயிரும் ஒன்றாய் ஒப்பற்ற காதலின்பம் அனுபவிக்கும் புண்ணிய சாலிகள் வாழ்கின்ற அந்த உத்தரகுருநாடு, சிவபிரானும் திருமாலும் பிரமதேவனும் ஆட்சிபுரிதற்கிடமாகிக் கொடைகொடுத்தலே மிகுதியாகப் பொழுதுபோக்குபவனாதலால், மிகு தியாகவினோதனென்று துதிக்கப்பெற்ற சோழவேந்தனுடைய பொன்னிநாடு போன்றிருப்பதைக் கண்டு களித்துப்போகலானான். போகலுற்றவன், அகில உலகத்தையும் அளக்கவளர்ந்த திரிவிக்கிரமனென்ற நீலநெடுமாலை நிகர்த்துப் பாதலம்* பூதலம் மீதலம்† என்ற மூன்றுலகங்களையும் ஊடுருவிநின்ற நீலமலையைக் கடந்து, பேரறிவாளனான சாம்பவான்சொன்ன மருத்துமலையைக் கண்டு, அங்கேயுள்ள மருந்துமூலிகைகள் விண்ணையளாவ ஒளிவீசுதலைப்பார்த்து, அந்த மலை மருத்துமலையேயென்று துணிந்து, அதன்மீது தாவினான். தாவவே, அந்த மருந்துகளைக் காத்துநின்ற தேவதைகள் கோபித்து 'நீ யார்? உன் நோக்கம் யாது? சொல் என, அனுமான், தான் வந்த காரணத்தைக் கூற, அந்தத் தேவதைகள் 'நீ கருதியபடி செய்தபின், இம்மருந்துகளை எங்களிடம் சேரும்படிசெய்க' என்று பணித்து மறைந்தன. அவைகளோடு அம்மருந்துகளைக் காத்து நின்ற சக்கராயுதமும் மறைந்தது.

---

* பாதலம் - பாதாளலோகம். † மீதலம் - விண்ணுலகம்.

### அநுமான் மருத்துமலையுடன் இலங்கைக்குத் திரும்பல்

அந்த மருந்துகளிருக்குமிடத்தைத் தேடிக் கண்டுபிடிக்க முயன்றால், நேரமாய்விடுமென்று நினைந்து, ஆயிரம்யோசனை அகலமும் ஆழமுமுடைய அந்த மருத்துமலையை அடியோடு பேர்த்தெடுத்து, ஒருகையிலே ஏந்தி, இலங்கைக்குத் திரும்பினான்.

### சாம்பவ விபீடணரிடம் இராமன் 'இறப்பேன்' எனல்

அநுமான்செயல் இதுவாக,—சாம்பவ விபீடணரால் தாள் வருடப்பெற்ற இராமன், தருமம் பூத்தாற்போலக் கருணைநிரம்பிய கண்களை விழித்துப்பார்த்துக் கூறுகின்றான். 'யான் அழியும்படியுள்ள என் விதியின்கொடுமையால், பிரமாத்திரத்தைத் தொடுத்து இந்திரசித்தைக் கொல்வோமென்று இலக்குவன் கூறியதற்கு இசைந்தேனில்லை. அந்த விதிக்கொடுமையால், இந்திரசித்துக்கும் இலக்குமணனுக்கும் போர்நேர்ந்தபோது, நான் இங்கே துணையாக நில்லாமல், ஆயுதபூசைசெய்யப் போனேன். அதனால், நம்மவரெல்லாம் இறந்தார்; என் தம்பி இந்திரசித்தை வெல்லாதொழிந்தான். இனி இங்கேயிருந்து வருந்துதலினாற் பயனில்லை. யானும் இறந்து, இறந்த நம் அன்பரை (அவர்கள் இப்போதிருக்கிற) சுவர்க்கலோகத்திற்குப்போய்க் காண்பதே நல்லது. என் தம்பியையும் நண்பரையும் இழந்தபின், இராக்கதரை வேரறக்கொன்று இராவணனை உயிர்வாங்கி இமையோருக்கு உதவிசெய்வதால் யான் அடையப்போவது யாது?' ]

### இராமனுக்கு இலக்குமணன்பாலிருந்த அன்பின் சிறப்பு

149 இளையவ னிறந்தபின் னெவரு[1] மென்னோதிக்
களவறு[2] கீர்த்தியென் னறனென்[3] னுண்மை யென்
கிளையுறு சுற்றமென் னரசென்[4] கேண்மை[5]யென்
விளைவுதா னென்மறை விதியென் மெய்ம்மை[6]யென்.

கொண்டுகூட்டு: 'எனக்கு, இளையவன் இறந்தபின் எவரும் என்? அளவு அறு கீர்த்தி என்? அறன் என்? ஆண்மை என்? கிளையுறு சுற்றம் என்? அரசு என்? கேண்மை என்? விளைவுதான் என்? மறைவிதி என்? மெய்ம்மை என்?'

பொருள்: 'எனக்கு, என் தம்பி யிறந்தபிறகு, எவராலேதான் என்ன பயன்? அளவற்ற கீர்த்தியினாலேதான் யாது பிரயோசனம்? தருமத்தினாலேதான் ஆவது என்? உறவினரால் உறுவது யாது? நட்பினால் நன்மை என்ன? (அது அது அதனதன் பயனை விளைத்தே விடுதலன்றிப் பழுதுறாத) வினைவினால்தான் என்ன பயன்? வேதவிதியினாலேதான் பயன் என்ன? (எல்லாவற்றிற்கும் உயர்வும் தாரகமுமான) மெய்யினாலேதான் (விளையும்) பயன் என்னை?'

மெய் - உண்மை; பரம்பொருளையும் குறிக்கும். கம்பராமாயணசாரம் அயோத்தியாகாண்டம் 'கரியமாலினும்' என்ற பாட்டுரையைப் பார்க்க.

இராமனுக்குத் தந்தைமுதலிய யாவர்பாலும் அறம்முதலிய எவற்றின்பாலும் உள்ள பற்றிலும் இலக்குமணன்பாலுள்ள பற்று மிக்கதென்பதை இக்கவியால் அறியலாம். இதனை அயோமுகிப் படலத்தில் இலக்குமணன் பிரிவாற்றாமையால் இராமன் இறக்கப் புகுந்தசெயல் வலியுறுத்தும்.

பாடபேதம்: [1] ஏவம், எவ்வம். [2] அளவுறு. [3] அறிவென், அரசென், தவமென். [4] அறமென், அரக்கன். [5] கேள்வி. [6] மென்மை, வேள்வி.

[ 'பெற்ற தந்தையான தசரதன் இறந்தபின் இறந்திலேன். உற்ற தந்தையான சடாயு இறந்தபின்னும் இறந்தேனில்லை. இப்போது தம்பி இறந்தபின்னும் இறந்திலேனேல், சீதை காதலால் செத்தானில்லையென்பர் சிறியோர். (இராப்பகல் தூங்காமல் என்னைக் காத்துப்பேணிய) அருங்குணமுடைய தம்பியின்றி, நான் உயிரோடிருந்து, அரக்கரை வேரறக்கொன்று வென்று, அயோத்தி சென்று, அரசாள்வேனானால், அது சாலவும் நன்றாயிருக்குமே!'

## இராமன் இறப்பேனெனச் சாம்பவான் கூறல்

'என் நிலை இதுவாதலால், வேறு யாதோராலோசனையுமில்லாமல், இறந்திடுவேன்' என்றான் (இராமன்). எனவே, சாம்பவான் 'அடியேன் கூறுவதொன்றுளது. அதனைக் கேட்பாயாக' என்று கூறுகின்றான்.

'"தன்பெருமை தான் அறியாத்தன்மையான்" நீ. உன் பெருமையை யான் அறிவேன். அதனை மொழிதல், இமையோ ரெண்ணத்துக்கு இடையூறுதலால், தகுதியன்று. (ஆயினும் அவசியத்தால் சாற்றினேன்). மாருதியை மருந்துகொணரும்படி வடதிசைக்கனுப்பியிருக்கின்றேன். ஒரு கணத்தில் வந்திடுவான். உன் துன்பம் தொலைந்திடும். எனக்கும் என் தந்தையாகிய பிரம னுக்கும் திருமாலுக்கும் சிவபிரானுக்குமே அந்த மருந்துகளின் உண்மை தெரியும். அவை, கடல்கடைந்தகாலத்திலே, அமுதத் தோடு தோன்றியவை. தோன்றியநாள்தொட்டு, இந்நாள்மட்டும், அவைகளைத் தொட்டவர் இல்லை. அவை உலகங்களையெல்லாம் படைத்த பிரமதேவன் இறந்தாலும், அவனையும் பிழைப்பிக்க வல்லவை. அவைகளைத் தாமதியாமல் அநுமான் கொண்டுவருவது திண்ணம்' என்று கூறி, அடிவணங்கினன் (சாம்பவான்).

'அநுமான் மருந்துகொண்டுவருவானென்று நீ கூறியதை நம்புகின்றேன்' என்று இராமன்கூறியபோது, வடதிசையில் ஓர் ஓசை உண்டாயிற்று. (அது அநுமான் வரும் ஓசைதான்). அந்த ஓசையோடு அநுமான் வரும் வேகத்தாலுண்டான சண்டமாருதத் தினல், கடல் கிளர்ந்தெழுந்து மேற்படர்ந்தது; மலைகள் பறியுண்டு வானத்திலேறின. இராமனும் சாம்பவானும் விபீடணனும் துயரம் நீரும்படி அநுமான் ஆரவாரித்தான்.

மருத்துமலைகோணர்ந்த அநுமான்தோற்றம்

ஆகாயம்வழியாக மருத்துமலையைக் கொணர்ந்த அநுமான், அமிழ்தம் உண்டாம்படி கடல்கடைதற்கு அந்தரமார்க்கமாக மந்தரமலையைக் கொண்டுவந்த கருடபகவானை ஒத்தான்; அன்றி, ஆதிசேடனேடு பகைத்து, அவன் படங்களால் விடாது அழுத்திக் கொண்டிருந்த மேருவின்சிகரங்களில் ஒன்றைப் பறித்து, இலங்கைக்குக் கொண்டுவந்து சேர்த்த தந்தையான வாயுபகவானை யும் ஒத்தான். ஓசையையும் காற்றையும் உணர்ந்த சாம்பவான், அநுமான் வந்துவிட்டானென்று கூறிமுடியுமுன், அநுமான் போர்க்களத்திலிறங்கிக் காலூன்றி நின்றான்.

### சுக்கிரீவன் முதலிய வானரர் பிழைத்தெழுதல்

இலங்கை பாவிகள் இருக்கிற இடமென்று அங்கே வர உடம்படாமல் மருத்துமலை அந்தரத்திலேயே தங்கிநின்றது. வாயுதேவன் அந்த மருந்துகளோடுபொருந்தி அளாவிவீசிய காற்றினால், சுக்கிரீவன் முதலியோர், உயிர்பெற்றெழுந்து, ஆரவாரஞ்செய்தார்கள். சீதைகண்களிற்படாதபடி, இராக்கதர் பிணங்களெல்லாம் இராவணனாணைப்படி கடலில் எறியப்பட்டிருந்ததனால், இறந்த இராக்கதரெவரும் பிழைத்திலர். மருந்துக்காற்றுப்பட்ட மரக்கலங்களே (எந்த மரங்களாற் செய்யப்பட்டனவோ, அந்த மரங்களாகிப்) பிழைத்தனவென்றால், குரங்குகள் பிழைத்தனவென்பதைக் கூறவேண்டுமோ!

### இலக்குமணன் எழுதலும் இராமன் தழுவலும்

இலக்குமணன், தைத்த கணைகள் கழன்று, எரிந்த புண்கள் குளிர்ந்து, மூடிய கண்கள் திறந்து, மறந்த உணர்வு(ம் இழந்த உயிரும்) திரும்ப வரப்பெற்று, யோகம்நீங்கி யெழுந்தாற்போல எழுந்தான்.

உடனே அவனை இராமன், மார்புற இறுகத்தழுவி வருத்தம் நீங்கி, மகிழ்வுற்றான். மகிழ்வுமிகுந்து வானவர்கள் ஆசிகூறினார்கள்; வானமாதர் நடனம் ஆடினார்கள்; மோனமுனிவர் வேதகீதம் பாடினார்கள். உலகெலாம் உவகைநிரம்பின. பிரமாத்திரம் இராமனை வலம்வந்து வணங்கித் தன்னிடம் சேர்ந்தது.

### இராமன் அனுமானைத் தழுவி நன்றிகூறி வாழ்த்துதல்

இராமன், துன்பமென்பது பேரும் அற்றொழிய, இன்பம் (இதயத்தில் பொங்கியெழுந்து) இரண்டுகண்வழியாகப்பெருகத் தாய்போல அன்புடைய அனுமானைத் தழுவினான். சீதையை அணைந்த மார்பில் (உள்ளத்தோடுள்ளமாக உயிரோடுயிராக இரண்டற) உள்ளே அழுந்தும்படி அணைக்கப்பெற்ற அனுமான், தாழ்மையோடு தாழ்ந்து தாள்களிலே வீழ்ந்து தொழுதான். ]

150 முன்னிற் றேன்றினோர் முறையி னீங்கலா[1]
தென்னிற் றேன்றிய துயரினீறு சேர்
மன்னிற் றேன்றினே முன்ன[2] மாண்டுளோம்
நின்னிற் றேன்றினே நெறியிற் றேன்றினய்.

கொண்டுகூட்டு: நெறியில் தோன்றினய்! முன்னில் தோன்றியோர் முறையின் நீங்கலாது, என்னில் தோன்றிய துயரின் ஈறுசேர் மன்னில் முன்னம் தோன்றினேம் மாண்டுளோம். நின்னில் தோன்றினேம்.

பொருள்: முன்(சென்மத்தில்) தசரதன் (வயிற்றின்) இடத்துப் பிறந்தோம். (சிலகாலம் உயிர்வாழ்ந்து) செத்துப்போனேம். (இப்போது, இந்தச் சென்மத்திலே) உன் (வயிற்றின்) இடத்துப் பிறந்தோம் (ஆக உள்ளோம்).

முன்னில் தோன்றினோர் - (எங்கள் குலத்தில் எங்கள் தந்தை தசரதனுக்கு) முன்புபிறந்த (மன்ன)வர்கள். என்னில்தோன்றிய துயரினல் - என்னல் (நான் காடுசென்றது காரணமாக) உண்டான (பிரிவாற்ருமைத்) துன்பத்தினல். ஈறு (-இறுதி) சேர் - மரணமடைந்த. முன்னம் - முன் - முன்சென்மத்தில். நெறி, இங்கே நன்னெறியைக் குறித்தது.

இந்தக் கவிசம்பந்தமாகப் பி. ஸ்ரீ. ஆசாரியார் தம் 'கம்பசித்திரத்'திற் கூறுவது வருமாறு:—'இதற்குமேல் நன்றிசொல்லமுடியுமா? இலக்கியவுலகத்திலே சஞ்சாரஞ்செய்துபாருங்கள். அனுமான்செய்த ஆச்சரியவைத்தியத்திற்கு இந்த 'நன்றி'யைக்காட்டிலும் ஆச்சரியமான ஒரு சம்மானமும் உண்டா?'

இராவணனாலும் அவனாணையின்படி இராட்சசிகளாலும் அத்தியந்த துன்பமடைந்த சீதை எல்லா நம்பிக்கைகளையும் இழந்து தற்கொலை செய்யத்தொடங்கிய தற்சமயத்தில், அனுமான், தான் இராமதூதனென்று தெரிவித்து, இராமன் முத்திரைமோதிரத்தை அடையாளமாகக் காட்டி, இராமன் இராவணனைக் கொன்று அவளைச் சிறைமீட்பது திண்ணமெனக் கூறியபோது, சீதை நன்றி கூறியது, இங்கே இராமன்கூறிய நன்றிக்கூற்ருேடு ஒப்புநோக்குதற்குரியது. அது வருமாறு:—

'மும்மைசால் உலகுக் கெல்லாம் முதல்வற்கு முதல்வன் தூதாய்ச்
செம்மையால் உயிர்தந் தாய்க்குச் செயல் என்னால் எளிய துண்டே !
அம்மையாய் அத்தன் ஆய அப்பனே ! அருளின் வாழ்வே !
இம்மையே மறுமை தானும் நல்கினை இசையோ' டென்றாள்.*

(மும்மை - மூன்று. முதல்வற்கு முதல்வன் - திருமாலான இராமன். செயல் - கைம்மாறு - பிரதியுபகாரம். எளியது - (செய்தற்கு) எளியது. உண்டே - இல்லை. ஏகாரம் எதிர்மறைப்பொருளில் வந்தது. அத்தன் - தந்தை. நல்கினை - கொடுத்தாய். இசை - கீர்த்தி.)

பாடபேதம்: [1] நீங்கலா, நின்றிலாது, நீங்கலான். [2] முதல.

151 அழியுங் காற்றரு முதவி[1] யையனே
மொழியுங் காற்றரு முயிரின் முற்றுமே[2]
பழியுங் காத்தரும்[3] பகையுங் காத்தெமை[4]
வழியுங் காத்தனை[5] மறையுங்[6] காத்தனை[7]

கொண்டுகூட்டு: ஐயனே ! மொழியுங்கால், அழியுங்கால் தரும் உதவி உயிரின்முற்றுமே ! எமைப் பழியும் காத்து அரும் பகையும் காத்து வழியும் காத்தனை ! மறையும் காத்தனை.

பொருள்: (உயிர்) அழியநேர்ந்தகாலத்தில் (அந்த உயிரை அழியாதுகாத்து) உதவுகின்ற உதவிக்கு(ப் பிரதியாக) உதவும் உயிர் ஈடாகாது. (நீ உயிர்போய்விடாமற் காத்ததன்றி, எதிரிகளுக் குத் தோற்றோமென்ற) பழியையும் (நீக்கி) எங்களைக் காத்து (அம் மட்டோடு அமையாமல், நீ கொண்டுவந்த மருந்தினால் எங்களை முன்னிலும் அதிக பலசாலிகளாக்கி,) எங்களைப் பகை(வர் தீங்கு செய்கை)யினின்றும் காத்து, (நாங்கள் இறந்தால் பரதன் முதலி யோர் இறந்திடுவாராதலால், அவ்வாறு நேராமல் எங்கள்வமிச) வழியையும் (அழியாமற்) காத்தாய் ! (வேதவிரோதிகளான இராக் கதர் நாசமாவதற்கு உதவிசெய்தாயாதலால்) வேதங்களையும் காப் பாற்றினையானாய் !

---

* இப்பாட்டின் விரிவுரையைக் கம்பராமாயணசாரம் சுந்தரகாண்டத் தில் இப்பாட்டின்கீழ்க் காண்க. அடுத்த 'பாழிய' என்ற வாழ்த்துக்கவியும் உரையும் இப்பாட்டுடனும் உரையுடனும் சேர்த்துப்பார்த்தற் குரியவை,

மொழியுங்கால் - (நீ செய்த உயிருதவியை வித்தரித்துச்) சொல்லுமிடத்து. உயிரின்முற்றுமே ('கொடுக்கின் ஒன்றே பலகோடியாகுமால்' என்பதனுலும், விதைத்த விதையினளவுக்கு விளையும் விதையின் அளவு மிக அதிகமாயிருக்கவேண்டியது இயற்கையாமாதலாலும் உயிர்கொடுத்த உதவிக்குப் பிரதியாக) உயிர்கொடுத்தலால் (பிரதியுபகாரம்) முற்றுப் பெறுது. ஏகாரம் எதிர்மறை.

பாடபேதம்: [1] உதவிக்கு. [2] உயிரின் முற்றுமோ, உயிருங் காத்தனே. [3] காத்தனே, காத்தன. [4] பகையுங்காத்தனே. [5] காத்துநம். [6] மரபும். [7] காத்த நீ.

[ 'என் தம்பியும் நண்பரும் சிறிது உயிரொடுங்கியிருந்ததும், தக்கதாயிற்று, அவர்கள்பால் எனக்குள்ள அன்பு இவ்வளவினதெனக் காட்டுதற்கு ஏதுவானதனுல். எல்லாரும் இறந்துவிடாமல், என்னேடிருந்துவாழும்படி உதவிய நீ யாதொரு துன்பமும் நோயும் இன்றி, என்றென்றும் வாழ்வாயாக' என்று தான் கூறக் கருதியதைக் கூறி வாழ்த்துடன் முடித்தான் (இராமன்).

இராமன் தழுவி வாழ்த்திய அனுமானை மற்றெல்லாரும் சுற்றிநின்று தொழுது வாழ்த்தினுர்கள்.

அனுமான் மருத்துமலையை அதனிடத்தில்
கொண்டுபோய்வைத்தல்

சாம்பவான் சஞ்சீவிமலையை அது முன்னிருந்த இடத்திற் சேர்க்கும்படி கூற, அனுமான் அவ்வாறு செய்வானுனுன். ]

மருந்துமலைப்படலம் முற்றிற்று.

[தொடரும்.]

ஸ்ரீ:

# பரதாழ்வான்வைபவம்

[ககஉ-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

பின்பு பரதாழ்வான் கௌசலாதேவியிடம் தன் எண்ணங்களை உள்ளபடி வெளிப்படுத்தியவாறு கூறக்கருதிய மஹாகவி,

அடித்தலங் கண்டிலன் யானேன் ஐயனைப்
படித்தலங் காவலன் பெயராற் பாலனே
பிடித்திலிர் போலும்நீர் பிழைத்தி ரால்எனும்
பொடித்தலந் தோளுறப் புரண்டு சோர்கின்றன்.

என்கிறார்.

இதனுள், பொடித்தலம் தோளுறப் புரண்டு சோர்கின்றான் என்ற தன் கருத்து, இராமனைப் பிரிந்தும் தசரதனை யிழந்தும் வருந்தும் அரசமாளிகை பதினான்குநாளாய் அலகிடுவாரின்றித் தூளிமண்டிக் கிடந்த வெறுந்தரையில் இவன் கௌசலையைநோக்கித் தெண்ட னிட்டு விழுந்துகிடந்தபடியே கஞ்சுகதாரணமில்லாத தோள்க ளிரண்டும் புரண்டுபுரண்டு தூளிமண்டக் கிடந்து, துக்கமிகுதியால் சோர்வடைந்தவனாகித் தீனஸ்வரத்தோடுபேசுகின்றான்: என்பதாம்.

இங்கே பொடித்தலந்தோளுற என்றதனால், ராஜவேஷத்துக் குரிய கஞ்சுகதாரண்மின்றித் தாசவேஷத்துக்குரிய அரையுடை மட்டும் தரித்துவந்தானென்பது குறிப்பாயிற்று.

இவ்வாறு பரதாழ்வான் தன் உள்ளக்கிடக்கையைக் காயிக மாகக் காட்டிக்கொண்டே வாசிகமாகவும், அடித்தலங் கண்டிலன் யான் என் ஐயனை என்கிறான். இதன்கருத்து, எனக்கு ஸ்வாமி யான இராமபிரானை வழிபடுதற்குரிய தாஸனாயுள்ள யான், அவன் திருவடிச்சுவடு கண்டேனில்லையே; கண்டிருந்தால் அத்திருவடித் தொழும்புபுரிந்து கிருதகிருத்தியனாவேனே என்பதும், யான்

அடித்தலங்கண்டிருந்தால் அது செல்லாதவண்ணம் பிடித்துக் கொண்டு வேண்டுவேன் என்பதும், அவனை அடைதற்கு உபாய மாகப்பற்றற்குரியது அவனடித்தலமன்றோ, அதனை யான் அடை யாமையால் எனக்கு வேறு உபாயமொன்றுமில்லை; நீயே யுபாய மாகவேண்டும்: என்பதுமாம்.

படித்தலம் காவலன் பெயரற்பாலனோ என்றதன் கருத்து, முன்னையநாளில் அரசனுணைப்படி படித்தலங்காவலனாகக் கடவே னென்று சங்கற்பித்துக்கொண்டு காப்புங்கட்டிக் குலதெய்வங் கும்பிட்டுக் குருக்களிடத்து உபதேசங்கொண்டு விரதம்பூண்டு கிடந்தவன், பிற்றைநாள் அதனையிழந்து கானகம்புகுதற்குரிய னுவனோ? ஆகானே; சாமானிய ஜனங்களும் சுவார்த்தமான தத்தம் கலியாணத்திற் காப்புக்கட்டிக்கொண்டால் உடனே தம் தந்தை தாய் இறந்தாலும் காப்புக்கட்டிய கலியாணத்தையிழவாமலே செய்துகொண்டன்றோ அத்தந்தைதாய்க்குரிய ஈமக்கடனிறுப்பது அறநெறியொழுக்கமாயிருக்கச்செய்தே, அதனினும் சிறந்த பரார்த்ததருமமான ராஜ்யாபிஷேகத்துக்குக் காப்புக்கட்டிக்கொண்ட வன், அதனைச் செய்யாதொழியலாமோ? அவன் ஸர்வஸ்வாமியான மையால் தன்னை நியமிப்பாரில்லையென்று தன் நிரங்குசமான ஸ்வா தந்த்ரியத்தால் அதனைச் செய்யாதொழிந்து பெயர்ந்தான்போலும்: என்பதாம்.

இவற்றால் இவனுக்கு ராஜ்யாபிஷேகம்பெற விருப்பமில்லை என்பதும், இராமராஜ்யாபிஷேகத்தில் விருப்புடையன் என்பதும் குறிப்பாலுணர்ந்த கோசலைமுகம்நோக்கி, பிடித்திலிர்போலும் நீர் பிழைத்திர் என்கிறான் என்றார். இதன்கருத்து, அவன் ராஜ்யாபி ஷேகம் செய்துகொள்ளாமலே கானகம்செல்லக்கருதியபொழுது, உம்மிடம் சொல்லிக்கொண்டுசெல்லக்கருதிவந்து செங்கைகூப்பி நிற்பனன்றே? அப்போதே, காப்புங்கையுமாய்க் காடுசெல்ல லாகாது: என்று சொல்லி அவன் செங்கைகூப்பிநின்றநிலையில் அவன்கைகளை எளிதிற்பிடித்து நிறுத்திக்கொண்டீராகில் அன்பின் வலையிலகப்படுமவன் அன்னையின் ஆணை கடக்கவல்லனல்லன். அங்ஙனம் செய்யாது தவறிவிட்டீர்போலும்: என்பதும், பர்த்ரு

நியமனம் என்றும் அரசன் ஆணையென்றும் சாமானியதர்மத்தை மேற்கொண்டு பரமதர்மமாகிய பகவத்பரிசரியையைக் கைவிட்டது தவருயிற்று: என்பதுமாம்.

இன்னும்,

> கோடியவர் யாவருங் குலங்கள் வேரற
> நோடிதுவன் யானது நுவல்வ தெங்ஙனம்
> கடியவள் வயிற்றினிற் பிறந்த கள்வனேன்
> முடிதுவன் அருந்துயர் முடிய

என்கிருன்.

இதன்கருத்து, 'நான் கைகேயிவயிற்றிற் பிறவாது வேரொருத்திவயிற்றிற்பிறந்திருப்பேனுனல் உலகமெல்லாம் அருந்துயர்க்கடலிலழுந்தும்படி இக்கொடிய தீவினைபுரிந்த கைகேயிக்குப் பரிவுடையரான கொடியோர்களெல்லாம் குலநாசமாகும்படிசெய்வேன், யான் அவ்வாறு பிறவாமையால் அது சொல்வதனுல் பயனில்லை. வன்கண்மையுடையளாயும், எல்லாராலும் கடியத்தக்கவளாயுமுள்ள கள்ளக்கைகேயியின்வயிற்றிற் பிறத்தலால், பிறர் பொருளை வஞ்சித்துக்கவர்தற்குரிய கள்வனுகக்கருதப்படுகிறேன். அக்கள்ளத்தால் உலகுக்குண்டாயிருக்கும் துயருக்கு அளவில்லை; அதனைத் தீர்த்தற்கு வேறுபாயமில்லாமையால், (கொடியவர் யாவையும் குலங்கள் வேரற நொடியமுடியாமையால்) அத்துயரை விளைவித்த தீவினை தீருமாறு பிராயச்சித்தமாக அநசனவிரதமிருந்து என்னுயிரை விட்டுத்தீர்ப்பேன்' என்கிருன் என்பது.

இதனுல் லோகாபவாதத்துக்கு அஞ்சிநடக்கவேண்டுமென்பதாயிற்று.

மேலும்,

> 'இரதமோன் ருர்ந்துபா ரிருளை நீக்குமவ்
> வரதனி லோளிபெற வளர்ந்த தோல்குலம்
> பரதனேன் றேருபழி படைத்தது'

என்கிருன்.

இதன்கருத்து, நம் குலகூடஸ்தனான சூரியபகவான்றொடக்க மாகப் பகையிருளை மாய்த்துப் புகழொளி பரப்பி வளர்வடைந்து வந்த நம் பழமையான குடி இப்பொழுது பரதன் என்று சொல்லப் படும் ஒரு பெரும்பழியிருளைப் பெற்று அதனால் மறைந்து கிடக்கடவதாயிற்றே! என்பதாம்.

இதனால் யான் குலக்கேடனாகவும் பழிகாரனாகவுமிருக்கிறேன், என் பழிதீர்த்துக் குலம்விளங்கச் செய்யவேண்டும்: என்பது குறிப் பாயிற்று.

இக்குறிப்புக்கொண்டு கௌசலாதேவியின் உள்ளத்தே, 'இப் பழிதீர்தற்கு என்னசெய்யவேண்டும்' என்னும் குறிப்பு இங்கிதத் தால் தோன்ற, அக்குறிப்புக்கு விடையும் குறிப்பாற் கூறக்கருதிய பரதாழ்வான்பேச்சாலே, மஹாகவி,

'வாடொடு தாரணையான் வானில் வைகிடக்
காடொரு தலைமக னெய்தக் கண்ணிலா
நாடொரு துயரிடை நைவதே யெனும்
தாடொடு தடக்கையத் தருமமே யனான்.

என்கிறார்.

இதன்கருத்து, இவ்வுலகை ஆண்டுகொண்டிருந்த அரசன் வானகத்தானாய்த் திரும்பவருதற் கியலாதவனாய் அங்கே தங்கி நிற்க, அவ்வரசாளுதற்குரிய தலைமகனான இராமனும் கானகத்தா னாக, அவ்விருவர்செயலும் கண்டு ஆற்றாத உலகம் முதுகண் ணிழந்து குருடுபட்டுத் துயர்க்கடலுளழுந்தப் பார்த்திருப்பது நமக்குத் தகுதியாமோ? அம்மா! என்று, கௌசலாதேவியின் அடியிணைவிரல்நுனிகளைத் தன் நீண்ட கைவிரல்களால் தீண்டி வணங்கிக்கிடந்துகொண்டு, பகவத்பரிசரியாரூபமான பரமதர்மஸ்வ ரூபியான பரதாழ்வான் சொன்னான்: என்பது.

இதன்குறிப்பு, இராமனுக்கு ராஜ்பாபிஷேகம்செய்வித்தால் என்பழி தீர்வதோடு நம்குலம் விளங்குவதோடு உலகத்தோர் முதுகண்ணிழந்துபடும் அருந்துயரும் ஒழியும். இங்ஙனம் மூன்று பயனை ஒருங்களிக்கவல்லதொருசெயலை நாம் அடையாது கைவிட லாகாது. அதனை நாம் அடையுமாறு தேவரீர் அருள்புரியவேண்டு மென்று சரணம்புகுந்தான் என்பதாயிற்று.

இது, பகவத்ஸந்நிதியடையவிரும்புவோர் தாமே நேரேசெல்லாது, பகவத்ஸம்பந்தமுடையார்வாயிலாய் அடையவேண்டுமென்னும் மெய்ந்நெறியொழுக்கங்கொண்டு வேண்டியதாயிற்று.

பின்பு குடிமைமுதலிய குணவிசேடங்களாற்சிறந்த கோசலாதேவி பரதாழ்வானுடைய சொல் செயல் இங்கிதம் முதலியவற்றின் குறிப்பாலே அவனுக்கு ராஜ்யாபிஷேகம்செய்துகொள்வதில் விருப்பமில்லை என்பதையும், அவன்மனம் கைகேயிமனம்போலே இடையே திரியவில்லையென்பதையும் தெரிந்துகொண்டாள். அன்றியும், "நின்காதற்றிருமகன் பங்கமில்குணத் தெம்பி பரதனே துங்க மாமுடி சூடுகின்றான்" என்ற ராமவாக்கியத்தாலே, பரதன் ராஜ்யாபிஷேகம்செய்துகொள்ளற்கு இசைவுடையன்போலும் என்று எண்ணியிருந்த சந்தேகமும் தீர்ந்தாள். அதனால், பரதாழ்வான், "பரதனென்றொருபழிபடைத்தது" என்று சொல்லிய குறிப்புக்கொண்டு, அவனை உலகத்தார் பழித்துப் பாகவதாபசாரமடையாமைவேண்டியும், அவனுக்குப் பழிதீரவேண்டியும் உலகத்தாரைத் தெளிவிக்கக்கருதிப் பரதாழ்வானை நோக்கி,

"கைக்யர் கோன்மகள் இழைத்த கைதவம்
ஐயநீ யறிந்திலைபோலும்"

என்றாள் என்றார்.

இதற்குக் கௌசலைகருத்து, நீ அறிந்திருந்தால் இவ்வனர்த்தங்களொன்றும் உண்டாயிருக்கமாட்டாதென்பதே.

இங்ஙனம் கருதாது நீ அறிந்திருப்பாயென்றெண்ணியிருந்தேன்; அறிந்திலைபோலும் என்றாள்: என்று பரதாழ்வான் கருதினனாகி, உடனே இடியேறுபாய்ந்த அரியேறுபோலத் துடிதுடித்தெழுந்து தன்புற்றுமுழங்கி வீராவேசங்கொண்டு சூளுறவுசெய்து பேசத்தொடங்கினன்.

இச்சந்தர்ப்பத்தை யெதிர்பார்த்திருந்த மஹாகவி, அறவடிவாயுள்ள நல்வினைகளெல்லாம் தன் அகத்தேயடங்கியிருக்க விளங்குவது பகவத்பரிசரியாரூபமான பரமதர்மம். அதன் மறுதலையாயுள்ள பகவதபசாரமும் மறவடிவாயுள்ள தீவினைகளெல்லாம் தன்

அகத்தே அடங்கியிருக்க விளங்குவதொன்றுதலால் அத்தகைய பகவதபசாரம் ஒன்றுசெய்தவன் தீவினைகளெல்லாம் செய்தவனுவன் என்பதைப் பரதாழ்வான்வாயால் வெளியிடக்கருதி, 'அறங்கெடமுயன்றவன்' என்றுதொடங்கிப் பலபாடல்களால் விரிய விளம்புகிறார்.

அவற்றால் பகவதபசாரமான மஹாபாதகம் ஒன்றுசெய்தவன் தீவினைகளெல்லாம் செய்தவன் எய்தும் கதியெய்துவன் என்பது குறிப்பாயிற்று.

இவ்வாறு பரதாழ்வான்கூறிய சூளுறவாலே, கௌசலாதேவி,

> செம்மை நன்மனத் தண்ணல் செய்கையும்
> அம்மை தீமையும் அறிதல் தேற்றினள்.

என்கிறார்.

இதனுள், செம்மைநன்மனத்தண்ணல்செய்கை என்றது நடுவுநிலையுடைய பரதாழ்வான் செய்யக்கருதியசெயல். அதாவது ராம பட்டாபிஷேகம். அம்மைதீமையென்றது, ராமவனவாசநியமனம். அறிதல்தேற்றினாள் என்றது, இவ்விரண்டும் இருவரிடத்தும் ஒன்றோடொன்று மாறுபட்டிருத்தலால் இருவர்கருத்தும் ஒன்றுபட்டதன்றென்று அங்குள்ளோரெல்லாரையும் தெளிவித்துப் பரதாழ்வான் பழியை ஒழியச்செய்தாள்: என்பது.

இதனுள், தேற்றினள் என்ற பிறவினையால் அவனைப் பழித்துரைப்போரெல்லோரும், உண்மையும் அவன் மனச்செம்மையும் உணர்ந்து அவனைப் பழியாதிருக்கும்படி அவரைத் தேளிவித்துப் பரதாழ்வானைப் பழியைத் தீர்த்தாள்: என்பதே கவிகருத்தாயிற்று.

இதனோடிசையாமையால் கூரு-ஆம் பாட்டில், "தேருஞ் சிந்தையாள்" என்ற தன்வினைப் பாடம் தவறும் என்றும், அது "தேற்றும் சிந்தையாள்" என்றிருக்கவேண்டுமென்றும் தோன்றுகின்றன. இதனை, கூச-ஆம் பாட்டில் 'நிலம்பொறையாற்றல னேஞ்சந்துய் தேனச் சலம்பிறிதுற மனந்தளர்ந்து கூறுவாள்' என்பதும் வலியுறுத்தும்.

இப்படி பரதாழ்வான் சொல்லிய சூளுரைகளாலே அவனது தூயசிந்தையை எல்லோரும் அறியும்படி காட்டி, அவன்பழியை ஒழியச்செய்து, அவனிடத்தே அன்புடையாளான கௌசலை அவனை வாழ்த்திக்கொண்டிருக்குந்தருணத்தில் வசிஷ்டபகவான் வந்தார்.

அப்போது வசிஷ்டரைநோக்கிப் பரதாழ்வான் வினவியபடியைச் சொல்லக்கருதிய மஹாகவி,

வந்த மாதவன் றளில் வள்ளல் வீழ்ந்து
எந்தை யாண்டையான் இயம்புவீர் என
நொந்து மாழ்கினன் நுவல்வ தோர்கிலா
அந்த மாதவன் அழுது புல்லினன்.

என்கிறார்.

இதற்கு உலகியல்புநோக்கியபொருள் வெளிப்படையாயுள்ளது. அவ்விருவர்தகுதியும்நோக்கிய கவிகருத்தாகிய பொருள் குறிப்பாற் கொள்ளத்தகும்.

வந்த மாதவன் றளில் வள்ளல், வீழ்ந்து
எந்தை யாண்டையான் இயம்புவீர்

என்றதன் கருத்து, பரதாழ்வான்வந்தமைதெரிந்து அவனுக்குத் துக்கநிவிர்த்திசெய்து தசரதனது சரமக்கிரியை நடப்பிக்கக் கருதிவந்த தபோதநரான வசிஷ்டபகவானுடைய இணையடிகளிலே வள்ளலென்று சொல்லும்படி உடல் பொருள் ஆவி முதலிய ஸமஸ்தசம்பத்துக்களையும் பகவதர்ப்பணம்பண்ணிய பரமோதார சீலனன பரதாழ்வான் தெண்டனிட்டுநின்று, என் தந்தையார் பரலோகமடைந்தாரே! அவர் இன்னலோகமடைந்திருப்பரென்று யானறிந்திலேன். அவர் சத்தியரூபதர்மம் அழியாமற் காக்கவேண்டித் தன்னுயிர்துறந்த புண்யவிசேஷத்தாலே பிருஹ்மலோகமடைவாரோ? அல்லது சதாசுவமேத முதலான பல யஜ்ஞங்களைச்செய்த புண்யவிசேஷத்தால் ஸ்வர்க்கலோகமடைவாரோ? இராமபிரானைப்

புத்திரனைப்பெற்ற பகவத்ஸம்பந்தத்தாலே வைகுண்டலோக மடைவாரோ? சகலதர்மங்களையும்விட்டு எம்பெருமானைப்பற்று வது பரமதர்மமாயிருக்கச்செய்தே அவ்வாறுசெய்யாது தர்மத்தை யே பற்றிக்கொண்டு எம்பெருமானைக் கைவிட்ட காரணத்தாலே வேறுலோகம் அடைவாரோ? என்று அறியாது கலங்கு கிறேன். அவர் இன்னலோகமடைதற்குரியவர் என்பதை அவர் செய்துள்ள தர்மங்களையும், அந்தத் தர்மபலன்களையும்கொண்டு, தர்மசூக்ஷ்மமறிந்த தேவரீர் அறிந்தபடியை அடியேன் அறியுமாறு திருவாய்மலர்ந்தருளினால் அவர் உத்கதியடையும்படி அதற்கான பிருஹ்மமேதம் முதலான கிரியாவிசேஷம்கொண்டு அவரை ஆராதிக் கக்கடவேன்: என்றான் என்பதாம்.

நொந்து மாழ்கினன் நுவல்வ தோர்கிலா
அந்த மாதவன் அழுது புல்லினன்.

என்றதன் கருத்து, இப்படிப் பரதாழ்வான் வினவியபடி யுணர்ந்த வாறே தசரதனுக்குள்ள பகவத் ப்ராப்தியின் இழவை நினைந்து வருந்தி மயக்குற்று மறுமொழிசொல்ல மனமில்லாமலே, பரதாழ் வானுடைய பொருளடக்கமான சுருங்கியசொல்லால் வினவிய சொல்வன்மையறிந்து அதிசயித்து, அவனுக்கு வித்யாகுருவா யுள்ள வசிஷ்டபகவானே உவகைக்கண்ணீர் உகுத்துத் தழுவிக் கொண்டார் என்பதாம்.

பின்பு தசரதனுக்குரிய சாமக்கிரியைகளை முடித்துவந்து மந்திரத்தலைவர் புடைசூழ இருந்து இனிச் செய்யவேண்டிய காரியம் இன்னதென்று தெளியவேண்டிய சமயத்தில், பரதாழ்வானை நோக்கிய வசிஷ்டபகவான்பேச்சாலே வஸிஷ்டபரதஸம்வாதம்சொல் லக்கருதிய மஹாகவி,

உந்தையோ விறந்தனன் உம்முன் நீத்தனன்
வந்ததும் அன்னைதன் வரத்தின் மைந்தநீ
அந்தமில் பேர சளித்தி யன்னது
சிந்தனை யெமக்கெனத் தெரிந்து கூறினன்.

என்கிறார்.

இதனுள், உந்தையோ இறந்தனன் என்றதன் கருத்து, இவ்வுலகை ஆண்டுவந்த தசரதசக்கிரவர்த்தியான உன்னுடைய தந்தை இறந்தசெய்தி எல்லோருக்கும் தெரிந்ததே; அவன் திரும்பவந்து அரசுபுரியப்போவதில்லையென்பதும் தெரியும்; அதனல் இப்போது இவ்வுலகம் அராஜகதோஷத்துக்கு உள்ளாயிருக்கிறதென்பதும் நீயறிவை; ஆதலால் அந்தத் தோஷம் தீரும்படி அவனுடைய மைந்தனுயுள்ள நீ முடிசூடி அரசுபுரியவேண்டும் என்பதாம்.

இக்கருத்துக்கொண்டு வசிட்டர் கூறும்பொழுதே, பரதாழ்வான் என் முன்னவனை வஸிஷ்டர் மறந்தார்போலும் என்று நினைந்தான். அந்நினைவைக் குறிப்பாலுணர்ந்த வசிட்டர், அக்குறிப்புக்கு மறுமொழியாக, நம்முன் நீத்தனன் என்றூர். இதன் கருத்து, உனக்கு முன்னவனான இராமனும் ராஜ்பாதிபத்தியம் உனக்கே உரியதென்றுசொல்லிப் பின்தொடர்ச்சியில்லாமல் நீத்துவிட்டான். அதனல் அவனுக்குப் பின்னவனுகிய நீயே இந்த ராஜ்பாதிபத்தியம் பெறவேண்டும்: என்றூர் என்பதாம்.

இவ்வாறு அவர்சொல்லும்பொழுதே பரதாழ்வான், எனக்கும் இந்த ராஜ்யாதிபத்தியம் வேண்டாமென்றுநீத்தற்கு உரிமையுண்டு என்பதை மறந்தார்போலும் என்று நினைந்தான். இந்நினைவினைக் குறிப்பாலுணர்ந்த வசிஷ்டபகவான், வந்ததும் அன்னைதன்வரத்தின் என்றூர். இதன்கருத்து, நீ ஸ்வதந்த்ரனுக ராஜ்பம்வேண்டாமென்று நீத்தற்குரியையானாலும், இந்த ராஜ்பாதிபத்தியம் உன் அன்னைதன்வரத்தினல் உனக்குக்கிடைத்திருப்பதால் மாத்ருவாக்யபரிபாலனத்தின்பொருட்டு மாத்ருபாதந்த்ரனுய் அதனையேற்றுக்கொள்ளக்கடவை; இவ்வாறே இராமனும் மாத்ருபாதந்த்ரனுய் அவளிட்ட கட்டளையை ஏற்றுக்கொண்டிருக்கிறுன்; ஆதலால் நீ இதனை மறுக்கலாகாதென்றூர் என்பதாம்.

இக்கருத்துக்கொண்டு அவர்சொல்லும்பொழுதே, பரதாழ்வான் மனத்தே, தந்தையாரால் 'தாரமல்லள் துறந்தேன்' என்று துறக்கப்பட்டவள் எனக்குத் தாயுமல்லளே! அன்றியும்,

'என்றுன் பாவிக் கும்பி வயிற்றி னிடைவைகித்
தோன்றுந் தீராப் பாதக மற்றென் துயர்தீரச்
சான்றுந் தானே நல்லற மாகத் தகைஞாலம்
மூன்றுங் காணச் செய்தவம் யானே முயல்கின்றேன்'

என்று அவளிடம் நானே சொல்லி, அவள் குடற்றொடக்கையறுத்து விட்டு ஜ்ஞாநஜன்மம் அடைந்திருக்கும் எனக்கு அவள் அன்னை யாகாள் என்பதை அறிந்திலர்போலும் என்று நினைந்தான். இந் நினைவையறிந்த வசிட்டபகவான், இதற்கு மறுமொழியாக மைந்த நீ, அந்தமில் பேரர சளித்தி அன்னது சிந்தனை யெமக்கெனத் தெரிந்து கூறினன் என்றார்.

இதன்கருத்து, நீ தேகஜந்மம்பற்றி, உன்மாத்ருவாக்கியத்தை அநாதரிப்பாயாகுலும், ஜ்ஞாநஜன்மத்தில் வித்யாகுருவாயும் உப தேசகுருவாயுமுள்ள எனக்கு மைந்தனுயுள்ள நீ எனக்குப்பாரதந்த்ர னுய் என்சொற்படி நடக்கவேண்டும். அன்றியும், நானொருவன் என் காரியமாகச் சொல்வதுமன்று; உலகநன்மைக்காக இங்குள்ள மந்திரத்தலைவர்களெல்லாரும் கூடி ஆலோசித்துச் சொல்வது, ஆத லால், பரார்த்தபுத்தியால் ஏற்றுக்கொள்ளக்கடவை யென்று, பர தாழ்வான்கொண்ட கருத்துக்களையெல்லாம் தெரிந்து மறுத் துரைத்தார் என்பதாம்.

அப்போது ஆசார்யபரதந்த்ரனுன பரதாழ்வான் பட்ட பாட்டை,

நஞ்சினை நுகரென நடுங்கு வாரினும்
அஞ்சின னயர்த்தன னருவிக் கண்ணினன்

என்று படம்பிடித்துக்காட்டுகிறார் மஹாகவி.

இதன்கருத்து, சரீரநாசஞ்செய்யும் நஞ்சினை நுகரச்சொன் னுலும் ஆத்மஜ்ஞாநமுள்ளார் ஒருவாறு சகித்திருக்கவுங்கூடும், ஆத்மநாசகரமான இது, அவனுக்கு நஞ்சினும் மிக்கதாய்ச் சகிக்க வொண்ணுதாயிற்று: என்பதும், ஆத்மோஜ்ஜீவனஞ்செய்யவேண்டு மவரே ஆத்மநாசகரமானகாரியத்தைச் செய்யச்சொல்வதால் அது இவனுக்கு மிகவும் சஹிக்கமுடியாததாயிற்று என்பதுமாம்.

உ

# கரந்தைத் தமிழ்ச்சங்கப் புலவர் கல்லூரி,
# தஞ்சை.

## வேண்டுகோள்.

தமிழ்ப்பெருந்தகையீர் !

நம் கரந்தைத் தமிழ்ச் சங்க வெள்ளிவிழாவில் வருங்காலத் தமிழர் நலங் கருதி அருண்மிகு. ஞானியார் அடிகள் முன்னிலை யில் தொடங்கப் பெற்ற இப்புலவர் கல்லூரி சென்னைப் பல்கலைக்கழக வித்துவான் தேர்விற்குரிய தமிழ் நூல்களும், அடிப்படையான அறிவியல் நூல்களும், கவின்கலைகளும், தொழிற் கலைகளும் ஐந்தாண்டளவிற் கற்பிக்கும் நோக்கங் கொண்டுளது. பள்ளியிறுதித் தேர்வு (S S.L.C.) வரை பயின்ற மாணவர்கள் முதலாண்டில் உணவு, உறையுள் முதலியன இலவசமாகத் தரப்பெற்று புகுமுக (Entrance) வகுப்பில் கல்வி பயிற்றப் பெற்றனர். நுழைவுத் தேர்விற்றேறிய அம்மாணவர் கள் இரண்டாம் ஆண்டில் புலவர் முதல் வகுப்பிற் சேர்ந்து பயின்று மூன்றும் ஆண்டில் வித்துவான் முதற் றேர்வு (Preliminery) க்குச் செல்லும் தகுதி பெற்றிருந்தனர். ஆயினும், நம் கல்லூரியின் பொருட் குறை கருதிச் சென்னைப் பல்கலைக் கழகத் தார் அதற்கு ஒப்புதல் அளிக்க மறுத்தனர். அதனால் தேர்வுக்குச் செல்லும் உரிமை பெறாத அம்மாணவர்கள் இவ்வாண்டிற் பிற இடங்களுக்குச் செல்ல நேர்ந்தது. புலவர் புகுமுக வகுப்பு ஒன்றே சென்ற மூன்றுண்டுகளாக நடைபெற்று வருகின்றது.

இப்பொழுது, சங்கத்தாரது பெருமுயற்சியால் சென்னைப் பல்கலைக்கழகச் செயற்குழுவினர் (Syndicate) நம் கல்லூரிக்கு ஒப்புதல் அளித்துள்ளனர் என்பதைத் தங்களுக்கு மிக்க மகிழ் வோடு தெரிவித்துக்கொள்ளுகின்றோம். இனி நம் கல்லூரியிற்

கல்விபயில விரும்பும் மாணவர்கள் அகவைக்கட்டுப் பாடின்றி வித்துவான் தேர்வுக்குச் செல்லும் தகுதி பெற்றவராவர்.

ஆண்டு தோறும் மாணவர்கள் சேரவும், ஐந்து வகுப்புக்கள் வரை வைத்து நடத்தவும் பொருள் வசதிகளைத் தேடிக்கொள்ளும் நிலையில் இருக்கின்றேம். இவ்வாண்டில் இரண்டு வகுப்புக்கள் நடத்த ரூபா 2000 ஆவது வேண்டும்; அடுத்தடுத்த ஆண்டுகளில் வித்துவான் தேர்வுக்குரிய ஏனைய வகுப்புக்களும் தொடங்கப் பெற்று, மாணவரும் ஆசிரியரும் மல்கி இடம் பெறுவர், ஆண்டு தோறும் மாணவர் உணவுச் செலவும் தொழிலாளர் ஊதியமும் பெருகுமாதலால் இக்கல்லூரி பொருண்முட்டுப் பாடுடைய தாயுளது.

தமிழ்நாட்டின் எல்லைக்குள் இருபதின் மேற்பட்ட வட மொழிக் கல்லூரிகள் வளம்பெற நடைபெறுகின்றன. ஆனல் தமிழ்மொழிக் கல்லூரிகளோ ஒன்றிரண்டுதான் இருக்கின்றன.

வங்காளியர், தெலுங்கர், முதலியோர் தத்தம் மொழிகளைப் பேணி வளர்ப்பதைப் பார்த்தும், தமிழ் அறிஞர் வாளாயிருத்தல் தகுதியன்று ஆதலால் தமிழ்மொழி யாக்கத்தில் கருத்துடைய தாங்கள், இவ் வேண்டுகோளை ஏற்று இயன்றபெற்றி பொரு ளுதவி செய்தும் தங்கள் நண்பர்கட்கும் இதனை அறிமுகஞ் செய்து உதவிசெய்யத் தூண்டியும் ஆவன செய்ய வேண்டு கின்றேம்.

'முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னுல் முடியும்'; ஆதலால் பெருஞ் செல்வரும் பிறரும், பெருந்தொகையுஞ் சிறு தொகையுந் தந்து இக்கல்லூரியினைப் போற்றுதல் வேண்டும். அன்போடுதவும் சிறுபொருளும், ஈவோர் அன்பின் பெருக்கினுற் பெருகி, பெரும்பயன் தந்து கல்லூரியினை வளம்படுத்தும் என்ற துணிவோடு உங்கள் ஒவ்வொருவரையும் இயன்றது உதவ வேண்டுகின்றேம்.

இங்ஙனம்

**த. வே. உமாமகேசுவரன்,**

சங்கத் தலைவர்.

# கல்லூரி விதிகள்

க. பள்ளியிறுதி (S. S. L. C.) தேர்வில் தமிழில் நிறைந்த எண் பெற்ற மாணவர்கள் புலவர் புகுமுக (Entrance) வகுப்பிலும், சென்னைப் பல்கலைக் கழக நுழைவுத் (Entrance Examination) தேர்வில் தேர்ந்த மாணவர்கள் இலக்கணத்தில் சோதிக்கப் பெற்று புலவர் முதல் (Preliminary I Year) வகுப்பிலும் சேர்த்துக்கொள்ளப் பெறுவர். மேற்கூறிய தகுதியோடு தாசில்தாரிடமிருந்து வறுமைச் சான்று (Poverty Certificate) ம் பெற்று வருபவர்க்கு இலவச உணவும் உறையுளும் அளிக்கப் பெறும். ஏனையோர் தகுதியறிந்து மாதம் ஒன்றுக்கு ரூபா ஐந்துக்கு மேற்படாது ஏற்படுத்தப்பெறும் கட்டணம் செலுத்தி, இவ்வசதிகளைப் பெறலாகும்.

உ. தேர்ந்துகொள்ளப் பெற்ற மாணவர்கள் யாவரும் பின் வரும் ஆண்டுவரிகள் செலுத்துதல் வேண்டும்.

அ. சேர்க்கை வரி ரூபா ஐந்து,
ஆ. நூல் நிலையவரி ரூபா மூன்று.
இ. விளையாட்டு வரி ரூபா இரண்டு.

இவை முன்னதாகவே செலுத்தப்படவேண்டும்.

ங. மாணவர்களுள் உண்டி, உறையுள் வகையில் சாதி சமய வேறுபாடுகட்கு இடந்தர இயலாது. சைவ உணவுக்கு மாறான உணவில்லை.

ச. படுக்கை, விளக்கு, எழுதுகருவி, பாடநூல்கள் முதலிய வற்றை மாணவர்களே தத்தம் பொறுப்பில் ஆக்கிக்கொள்ள வேண்டும்.

ரு. கல்லூரியின் ஒழுக்க விதிமுறைகட்கும், மாணவர் விடுதி நெறி முறைகட்கும் மாணவர்கள் அடங்கி ஒழுகுதல் வேண்டும். வைகறைத் துயிலெழுதலும், உடற்பயிற்சி செய் தலும், கடவுள் வழிபாடு செய்தலும் வலியுறுத்தப்பெறும்.

சா. ஒவ்வொரு மாணவரும் நூற்றுக்குத் தொண்ணூறு விகிதம் வருகை (Attendance) உடையராதல் வேண்டும்.

எ. இடைக்காலத்தே மாணவர் விடுதியினின்றும். விலகு வோர் தொடக்க முதல் அகலும்வரை சங்கத்தாருக்கு தம் பொருட்டாக நேரும் இழப்புத் தொகையை ஈடு செய்து கொடுப்போமென மாணவர் ஒவ்வொருவரும் பொறுப்பும் தகுதியுமுடைய ஒருவரும், தாமுமாக முறியெழுதித் தர வேண்டும்.

அ. 1941-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 2-ஆம் நாள் கல்லூரி திறக்கப்பெறும். சேரவிரும்பும் மாணவர்கள், ஒன்றேகாலணு தபாற்றலையனுப்பி, விண்ணப்பத்தாள் பெற்று 15-6-1941-க்குள் சங்கத் தலைவர் முன்னிலைக்கு அனுப்புதல் வேண்டும்.

கூ. தேர்தல் முடிபு 25-6-1941-க்குள் அறிவிக்கப்பெறும்.

*த. வே. உமாமகேசுவரன்,*
*சங்கத் தலைவர்.*

பின்னும்,

நடுங்கினன் நாத்தடு மாறி நாட்டமும்
இடுங்கினன் மகளிரின் இரங்தும் நெஞ்சினன்
ஒடுங்கிய வுயிரினன் உணர்வு கைதரத்
தொடங்கினன் அரசவைக் குள்ளந் சொல்லுவான்.

என்கிறார்.

இதன்கருத்து, வஸிஷ்டபகவான் சொல்லியபடியுள்ள இந்த ஆசார்யபாரதந்த்ரியம் ஒருவாற்றானும் என்னால் மறுக்கத்தக்க தன்று. அவர் சொல்லியபடி செய்வதற்கு நான் இசையாதிருந்தாலும், அவர் தாமே பலாத்காரமாகவைத்து முடிபுனைவித்துவிடுவாரோ? என்று எண்ணி அச்சக்குறிப்பால் நடுங்கினான்; அவர்க்கு உத்தரஞ்சொல்லமுடியாதவனாய் நாத்தடுமாறினான்; கண்கள் இடுங்கினான்; பரதந்த்ரரான பெண்கள், தாமிசையாத பழியைப் பிறர் அவர் தலைமேலேற்றினால், அவர்கள் எப்படிக் கண்ணீருகுத்து நிற்பார்களோ அப்படி நின்றான்; உயிரொடுங்கித் தன்னையும் மறந்தான். அந்நிலையில் வஸிஷ்டபகவானிடம் வித்யாப்யாசஞ்செய்ததனாலுண்டாகிய ஜ்ஞாநம்வந்து துணைசெய்ய, ராஜஸபையை நோக்கித் தன்கருத்தை வெளியிடத்தொடங்கினான்: என்பது.

அவன்சொல்வது வருமாறு:—

மூன்றுல கினுக்குமோர் முதல்வ னும்முதற்
றோன்றின னிருக்கயான் மகுடம் சூடுதல்
சான்றவ நுரைசெயத் தரும மாதுமேல்
ஈன்றவள் செய்கையி னிழுக்குண் டாதுமோ

என்கிறான்.

இதன்கருத்து, 'நம்முன் தோன்றினன்' என்றீர்.

அஜோபிஸந்நவ்யயாத்மா பூதாநாமீஸ்வரோபிஸந் ।
ப்ரக்ருதிம்ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம்யாத்மமாயயா ॥

என்பதனால் அவன் யோகமாயையால் மறைந்து மூன்றுலகங்களுக்கும் ஒரு முழுமுதற்றனியரசாயிருந்துகொண்டே, தன்னுடைய விசித்திரசக்தியாலே திவ்யமங்களவிக்ரஹவிசிஷ்டனாகவும் தோன்றுகிறேன் என்று சொல்லியிருக்கிறபடியே, வெளிப்படை

யாகவும் இவ்வுலகை அரசாளத்திருவுள்ளம்பற்றி எனக்கு முன்னவ னாகவும் அவதரித்திருக்கிறான்; என்பது தோன்ற, 'மூன் றுலகினுக்கும் ஓர் முதல்வனாய் முதற்றோன்றினன்' என்கிறான். அதாவது: எனக்கு முன்னவனாயிருப்பானும், மூன்றுலகினுக்கும் ஓர் முதற்றனியரசாய் எந்நாளுமிருந்துகொண்டிருப்பவனும் ஒருவ னே என்பது. அத்தகையானை 'நும்முன் நீத்தனன்' என்று வசிஷ்ட பகவான்வாயாலே சொல்லலாமா? மூன்றுலகுக்கும் அவனுக்கு முள்ள ஸ்வஸ்வாமிபாவசம்பந்தம் நீத்தற்குரியதா? அது நித்தியமா யுள்ளதன்றோ? மூன்றுலகத்துள் இவ்வுலகம் அடங்கியதன்றோ? ஆகையாலே அது அவனால் நீத்ததாகமாட்டாது. ஆதலால் அவனே அதற்குரியவன்: என, நும்முன் நீத்தனன் என்று வஸிட்டர்கூறிய பூர்வபக்ஷவாக்கியநிரஸனம்பண்ணிவிட்டுப் பின் னும் சொல்லுகிறான். அவனையொழித்து, அவனுக்கு அடியனான யான் மகுடம்சூடுதல் தர்மமென்று தர்மநிர்ணயஞ்செய்யவல்ல நீங் கள் சொல்லுகிறீர்கள். உங்கள்சொல்லை வேதவாக்காகக்கொள்ள வேணுமென்பதை, நான் அறிவேன். அதனை,

'அறனல்லவும், எய்தி னலது செய்கவென் றேவினால்
மெய்ய நின்னுரை வேதமெனக்கொடு
செய்கை யன்றோ அறஞ்செய்யுமாறு'

என்று இராமனே சொல்லியும் செய்துமிருக்கிறான். ஆனால் அது அவன் அநுஷ்டித்துவரும் லௌகிகமான சாமானியதர்மவிஷயம். இது பாரலௌகிகமான விசேஷதர்மவிஷயமாகையாலே பகவ தபசாரதோஷத்தோடுகூடிய இது, இங்குப் பொருந்தாது; ஆப்த தமாகிய நீங்கள் சொல்வதனாலே நான் முடிசூடியாள்வது தர்மமாகு மானால், எனக்கு அத்யந்தம் ஆப்ததமபுத்தியோடுகூடிய கைகேயி செய்த செய்கைகளையும் இழுக்கில்லை என்றே சொல்லவேண்டும்; ஆதலால் கைகேயி கருத்தும் உங்கள்கருத்தும் ஒன்றாயிற்று: என்றான் என்பதாம்.

பின்னும்,

அடைவரு கொடுமையென் னன்னை செய்கையை
நடைவருந் தன்மைநீர் நன்றி தென்றிரேல்
இடைவரு காலங்க ளிரண்டும் நீந்தநது
நடைவருந் திறேறிக் கலியி னாட்சியோ. என்றான்.

இதன்கருத்து, முறைமையில்லாத குடிலநெஞ்சுடைய கைகேயியின்செய்கையை, உலகநடையும் வேதநடையுமான ஒழுக்கங்களையறிந்தொழுகிவரும் நீங்கள் நல்லதென்று சொல்லுகிறீர்கள். அது உங்கள்கொள்கைக்கே விரோதமாயுள்ளது. அன்றியும், சிஷ்டாசாரத்துக்கு விரோதமான அதர்மங்களைத் தர்மமாகச் சொல்லுவது கலியுகத்திலுண்டு. அது இப்போது காணப்படுதலால் இக்காலம் கலியுகமாய்விட்டதோ! என்றான் என்பது.

பின்னும்,

வேத்தவை யிருந்தநீர் விமல னுந்தியிற்
பூத்தவன் முதலிய புவியுட் டோன்றினர்
மூத்தவ னிருக்கவே முறைமை யானிலம்
காத்தவ ருளரெனிற் காட்டிக் காண்டிரால்.

என்றான்.

இதனால், மூத்தவன் இருக்க இளையவன் முடிசூடுதல் சிஷ்டாசாரமில்லை என்கிறான். அதாவது,—நீங்கள்சொல்லும் தர்மநிர்ணயம் ஆப்தவாக்கியமானாலும், அதனினும் உயர்ந்தபிரமாணம் சிஷ்டாசாரம். அது நீங்கள்சொல்வதற்கு விரோதமாயுள்ளது என்றான் என்பது.

பின்னும்,

நன்னெறி யென்னினும் நானிந் நானிலம்
இன்னுயிர்ப் பொறைசுமந் தினிது வாழ்கிலேன்
அன்னவன் றனைத்தொடர்ந் தலங்கன் மாமுடி
தொன்னெறி முறைமையிற் சூட்டிக் காண்டிரால்.

என்றான்.

இதன்கருத்து, நீங்கள்சொல்வதே நன்னெறியென்றுவைத்துக்கொண்டாலும் இராமபிரானைப்பிரிந்து நான் உயிர்ப்பொறையான இவ்வுடலைச் சுமந்து அரசாட்சிசெய்துகொண்டிருக்கமுடியாதவனாய்த் தசரதன்கதியடைவேன். அதனாலும், உங்கள்செய்கை பயனற்றதாய்முடியும். ஆதலால் உங்கள் ஆலோசனையை ஒழித்துவிட்டு, இராமபிரானை யெழுந்தருளச்செய்து சிஷ்டாசாரப்படியே அவனுக்கு முடிசூட்டி அவனை ஸேவித்து உஜ்ஜீவனமடைவீர் என்றான் என்பது.

பின்னும்,

அன்றேனி லவனொடு மரிய கானிடை
நின்றினி திருந்தவ நெறியி னுற்றுவேன்
ஒன்றினி யுரைப்பின்என் னுயிரை நீக்குவேன்
என்றனன் என்றபோ திருந்த பேரவை;

இதன்கருத்து, இவ்வாறு நீங்கள்செய்ய உடன்படாவிட்டால் இராமபிரானோடு அரிய காட்டின்கண்ணே இருந்துகொண்டு அவனுடைய பாதஸேவையாகிய பெருந்தவத்தை ருசியோடுசெய்து கொண்டிருப்பேன். இது என்முடிவான கருத்து. இதற்கு மாறாக வேறேதேனும் ஒன்றுசொல்லிப், பரவசமாயுள்ள என்னைப் பலாத்காரத்தாலே முடிசூட்டுவீர்களாகில், அதனால் யானடையும் பகவதபசாரத்துக்குப் பிராயச்சித்தமாக என்உயிரைப்போக்கிக் கொள்ளவேண்டியவனாவேன், அதனாலும் உங்கள்முடிவு பயனற்றதாய்விடும் என்றான் என்பதாம்.

ஆன்றபே ரரசனு மிருப்ப வையனும்
ஏன்றனன் மணிமுடி யேந்தல் வேந்தநீ
வான்றொடர் திருவினை மறுத்தி மன்னிளந்
தோன்றல்கள் யாருளர் நின்னிற் றேன்றினர்;

ஆழியை யுருட்டியும் அறங்கள் போற்றியும்
வேள்வியை யியற்றியும் வளர்க்க வேண்டுமோ
ஏழினோ டேழெனு முலக மெஞ்சினும்
வாழிய நின்புக ழென்று வாழ்த்தினர்.

இவற்றின்கருத்து, நீ இராமனிலும் சிறந்தவனாய்; என்று துதித்துக்கொண்டு, முடிசூடி உலகாண்டும், அறங்களைப்போற்றியும் வேள்விகளையியற்றியும் நீ ஸாமாநியதர்மங்களை வளர்க்க வேண்டுமென்று எண்ணி உன்னிடம் நாங்கள் மன்றாடியது பிழையென்றுணர்ந்தோம் என்று பரதாழ்வானிடம் சபையோர் பிழை பொறுப்பித்துக்கொண்டு அவனை வாழ்த்தினர் என்பது.

திரு. நாராயணையங்கார்,
பத்திராசிரியர்.

ஸ்ரீ:

தா(யா)ராநகரவேந்தன் போஜதேவன் இயற்றிய

# ஸரஸ்வதீகண்டாபரணம்

## (கலைமகள்கழுத்தணி)

கஙஅ-ஆம் பக்கத் தொடர்ச்சி.

[ஸ்ரீ. V. S. ராமஸ்வாமிசாஸ்திரியாரவர்கள், B.A., B.L.]

### 18. கடோரம்.

கடோரமபி பத்நந்தி தீப்தமித்யபரே புந: ।
தேஷாம் மதே ந தத்ராபி தூஷணம் நைவ வித்யதே ॥ ௧௨௮ ॥

வேறுசிலராகிய கௌடகவிகள், வல்லோசைமிகச் செய்யுள் யாப்புழி ஒளியுள்ளதாய்க் காட்டுமெனக்கொண்டு அவ்வாறு யாப்பர்; அவர்தம் கொள்கைவயத்தால் அது குற்றமாகாது குணமாம்.

உதாரணம்:—

ந்யக்ஷேண பக்ஷ: க்ஷபித: க்ஷத்ரியாணாம் க்ஷணாதயம் ।

க்ஷத்திரியப்படை ஒருகணத்தில் முழுதும் அழிக்கப்பட்டது.

இங்கே வல்லினமிக்கு வல்லோசையே வந்திருப்பினும், இன்னோரன்ன தொடர்நிலைகள் ஒளியுள்ளனவென்பர்.

### 19. அப்பிரஸந்நம்.

கவிஸம்ஜ்ஞாப்ரஸித்தார்த்தம் ப்ரஸாதவத் ।
விபர்யயோऽஸ்யாப்ரஸந்நம் சித்ராதௌ தந்ந துஷ்யதி ॥ ௧௨௯ ॥

கல்லாதோருக்கும், பெண்டிர்க்கும், சிறுவர்க்கும் பொருள் அறியப்பட்டுள்ள சொற்களை வழங்குதலே பிரஸாதம் என்னும் குணமாம்; அங்ஙனமன்றிக் கற்றோர்க்கே பொருள்விளங்கும் சொற்களை வழங்குதல் 'அப்பிரஸந்நம்' என்னும் குற்றமாம். ஆயினும் சித்திரகவி முதலிய இடங்களில் அது குற்றமாகாது குணமேயாம்.

உதாரணம்:—

யாஸ்ரிதா பாவநதயா யாதநாஹ்திநீவயா ।
யாவநீயா யியா மாயா யாமாயாலஸம்ஹுதா ஸ்ரியா ॥

யாவளொருதேவி புனிதத்தன்மையோடு ஆசிரயிக்கப்பட்டவளோ, யாவளொருதேவி, உயர்ந்த அறிவைக்கொண்டு மாயையின் கணுள்ள அறியாமையின் மிகுதியை வாட்டுதற்குப் பிரார்த்திக்கத் தக்கவளோ, யாவளொருதேவி இலக்குமியாலும் துதிக்கப்பட்டவளோ (அந்தத்தேவியை வணங்குகின்றோம்).

இங்கே வந்துள்ள பலசொற்கள் எளிதில் பொருள்விளங்குதலரியவாயினும், இது அஷ்டதளபதுமம் (-எண்ணிதழ்த்தாமரை) என்னும் சித்திரகவியாதலால் ஈண்டுக் குற்றமாதலின்று.

## 20. நேயார்த்தம்.

ஈயதாஹாராதிமஹாயம் நேயாயம் ஆகமாஹார்யதம் ।
ஸமஹூதே பஸிஜஸெ்நதோஷவஜிஷ்யதே ॥ ௧௩௦ ॥

கூறக்கருதியபொருளை விளக்குதற்குரிய சொற்கள் யாவும் வாக்கியத்தின்கண் வருதலின்றிச் சில சொல்லெச்சம் இசையெச்சம் முதலியவற்றால் கூட்டிக்கொள்ளுமாறு விடப்பட்டிருப்பின், அது நேயார்த்தம் என்னும் குற்றமாம் என்று முன்பு கூறப்பட்டது; அங்ஙனம் விடப்பட்டிருப்பினும், அச்சொற்கள் எளிதில் தோன்றுவனவாயிருப்பின் ஆண்டுக் குற்றமின்றிக் குணமேயாம்.

உதாரணம்:—

மாஹவஹ உநயஃ வவநோ வா
வாரணோ உடிகயஃ வாஸவலா ।
வாஹிநீ ஜஹுஹாஃ காமிஸம்வா
ஹஸிதேஜஹூர யுதயாஸஹ வருக்ஷ ॥

மரமே! உன்னைத் தீ (-எரியாதொழிக.) காற்று (முரியாதொழிக); மதங்கொண்ட யானை (வளைத்து ஒடியாதொழிக);

நகியம் (வெட்டாதொழிக); ஆற்றின் நீர்ப்பெருக்கு (பறியாதொழிக); இடி (தாக்காதொழிக) உனக்கு, உன்னைப்பற்றிப்படர்ந்துள்ள கொடியுடன் மங்கலமே யுளதாகுக.

இங்கே பல வினைச்சொற்கள் எச்சத்தால் தந்துரைக்கப்பட்டிருப்பினும், அவை எளிதில் தோன்றநிற்றலால் இது குற்றமின்றாயிற்று.

### 21. கிராமியம்.

அஸப்⁴யார்த²ம் ஹி தத் க்³ராம்யம் தத்ஸ்பஷ்டதயைவ ப்ரதீயதே ।
விதக்³தோ⁴க்தௌ து தஸ்யார்த²꞉ ப்ரச்ச²ந்நத்வம் நிக³ச்ச²தி ॥ கஙக ॥

அவைபல்கிளவியை வழங்குதல் கிராமியம் என்னும் குற்றமாம் என்று முன் கூறப்பட்டது; அது குற்றமாவது இழிசனர்களால் மறைத்துக்கூறுதலின்றி உள்ளவாறே கூறப்படும்வழியே. அறிஞர்களால் சதுரப்பாடுதோன்றக் கூறப்படின் அக்குற்றம் மறைபட்டுக்கிடக்கும்; எனவே அது குணமாம்.

உதாரணம்:—

காமம் கந்த³ர்ப்பசண்டா³லோ மயி வாமாக்ஷி நிர்த³ய꞉ ।
த்வயி நிர்மத்ஸரோ தி³ஷ்ட்யா ஸோ(அ)யமஸ்மாஸ்வநுக்³ரஹ꞉ ॥

அழகிய கண்களையுடையோய்! கொடியமன்மதன் என்மீது தயையற்றுள்ளான். உன்னிடத்து அவன் வெறுப்புற்றிலன். இது அவன் எனக்குச்செய்த அநுக்கிரஹமேயாகும்.

இங்கே, ஒரு தலைவியிடத்துத் தனது புணர்ச்சிவேட்கையைத் தெரிவிக்கும் தலைவன், பட்டாங்கேகிளவாது மறைத்துச் சதுரப்பாடாகவுரைத்தலின் குற்றமின்றிக் குணமேயாயிற்று.

### 22. அஸமஸ்தம்.

ஓஜஸ்ஸமாஸபூ⁴யஸ்த்வம் தத்³வீராதே³ஷு வ்யவஸ்தி²தம் ।
விபர்யயோ(அ)ஸமஸ்தம் தத்³வத் தோ³ஷஹாக் ॥ கஙஉ ॥

தொகைநிலை மிக்குவருமாறு தொடுப்பது ஓஜஸ் என்னும் குணமாம்; அது வீரம் முதலிய ஒளிதங்கிய பொருள்களை வருணிக்குமிடத்து வாற்பாலதாம். அத்தகைய இடங்களிற் சொற்கள்

தொகைநிலையாயிராது தொகாநிலையாயிருத்தல் அஸமஸ்தம் என்னும் குற்றமாம் என்று முன் கூறப்பட்டது; எனினும், தொகா நிலைச்சொல்லே வந்திருப்பினும் பிறவாற்றால் அவ்விடத்தில் ஒளி மிகுந்துகாட்டுமாயின் அங்கே அசமஸ்தம் என்பது குற்றமாகாது குணமாம்.

உதாரணம்:—

𑌯𑍋 𑌯𑌃 𑌶𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 𑌬𑌿𑌭𑌰𑍍𑌤𑌿 𑌸𑍍𑌵𑌭𑍁𑌜𑌗𑍁𑌰𑍁𑌮𑌦𑌃
𑌪𑌾𑌣𑍍𑌡𑌵𑍀𑌨𑌾𑌂 𑌚𑌮𑍂𑌨𑌾𑌂
𑌯𑍋 𑌯𑌃 𑌪𑌾𑌞𑍍𑌚𑌾𑌲𑌗𑍋𑌤𑍍𑌰𑍇 𑌶𑌿𑌶𑍁𑌰𑌧𑌿𑌕𑌵𑌯𑌾
𑌗𑌰𑍍𑌭𑌶𑌯𑍍𑌯𑌾𑌂 𑌗𑌤𑍋 𑌵𑌾 ।
𑌯𑍋 𑌯𑌸𑍍𑌤𑌤𑍍𑌕𑌰𑍍𑌮𑌸𑌾𑌕𑍍𑌷𑍀 𑌚𑌰𑌤𑌿 𑌮𑌯𑌿 𑌰𑌣𑍇
𑌯𑌶𑍍𑌚 𑌯𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌤𑍀𑌪𑌃
𑌕𑍍𑌰𑍋𑌧𑌾𑌨𑍍𑌧𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌤𑌸𑍍𑌯 𑌸𑍍𑌵𑌯𑌮𑌿𑌹 𑌜𑌗𑌤𑌾
𑌮𑌨𑍍𑌤𑌕𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌕𑍋𑌽𑌹𑌮𑍍 ॥

(துரோணன் இறந்ததுகேட்டுப் பாஞ்சாலர் முதலியோரைக் கோறற்கு வஞ்சினங்கூறும் அசுவத்தாமா கூறியது.)

பாண்டவர்சைநியத்தில் எவ்வெவர்கள் கைவலியோடு ஆயுதம் எடுத்துள்ளார்களோ, வயது முதிர்ந்தவராயினும் சிறு குழந்தைகளேயாயினும் கருப்பத்திலுள்ள குழந்தைகளேயாயினும் மற்றும் யாவரே எனினும் பாஞ்சாலகோத்திரத்தில் எவ்வெவர் உதித்துள்ளார்களோ, எவ்வெவர் (என்தந்தையாரைக் கொன்ற கொடிய) அச்செயலைப் பார்த்திருந்தாரோ, நான் செல்லும்போது எவ்வெவர் என் எதிரில் வருவாரோ—அவ்வவர்க்கும் உலகம் முழுமைக்கும், கோபத்தால் கண்தெரியாதவனாகிய யான் எமனினும் மிக்க எமனாயிருப்பேன்.

இங்கே, சொற்கள் தொகைநிலையாய்வாராது தொகாநிலையாய் வந்திருப்பினும் ஒளிமிக்கிருத்தலால் இது குற்றமுள்ளதன்றாம்.

## 23. அநிர்வ்யூடம்

ஸமஸ்தே மஸமஸ்தம்வா நநிவஹேதி யத்வச: ।
தந்நிர்வ்யூடமஸமஸ்யாவிந தோஷ: க்வாவி தத்யயா ॥ ௧௩௩ ॥

தொகைநிலையாயேனும் தொகாநிலையாயேனும் ஒருமுறையே கடைபோகக்கூறுது, இடையே தொடங்கிவந்த முறையை மாற்றுவது 'அநிர்வ்யூடம்' என்னும் குற்றமாமென்று கூறப்பட்டது; ஆயினும், அது சில இடங்களிற் குற்றமாதலின்று.

உதாரணம்:—

ப்ரஸீத சண்டி த்யஜ மந்யுமஞ்ஜஸா
ஜநஸ்தவாயம் புரத: க்ருதாஞ்ஜலி: ।
கிமர்த்தமுத்கம்பிதபீவரஸ்தந
த்வயம் த்வயா லுப்தவிலாஸமாஸ்யதே ॥

சினங்கொண்ட பெண்ணே! விரைவில் கோபத்தை விட்டொழிவாயாக; யான் உன்முன்னே கைகுவித்துநிற்கிறேன். என் உன்னல் கொங்கைகளசையும்படி (பெருமூச்செறிந்துகொண்டு) உல்லாஸமின்றியிருக்கலாயிற்று ?

இங்கே, முற்பகுதியில் தொகாநிலையாய்த் தொடங்கிப் பிற்பகுதியில் தொகைநிலையாய்த் தொடுத்திருப்பதால் "அநிர்வ்யூடம்" என்னும் குற்றமுளதாமென்று தோன்றினும், பிற்பகுதியிற் சுவைவேறுபாடு குறித்துத் தொகைநிலைத்தொடர் வந்திருத்தலின் இன்னோரன்ன குணமேயாம்.

## 24. அநலங்காரம்.

அநலங்காரமித்யாஹுரலங்காரோஜ்ஜிதம் வச: ।
பஞ்சதோத்தராநுஸந்தாநே தஸ்ய ஸாயுஜ்யமிஷ்யதே ॥

அலங்காரமின்றிவரும் சொற்றொடர், 'அநலங்காரம்' என்னும் குற்றமுள்ளதெனப்பட்டது; ஆயினும், முன்னும் பின்னுமுள்ள

வாக்கியங்களையியைபுறச்செய்யவரும்வழி அலங்காரமின்றிவரினும் அவ்வாக்கியம் குற்றமுள்ளதாகாது.

உதாரணம்:—

நிஶம்ய தாஃ ஶேஷகவீரபிதாதுரதோக்ஷஜஃ ।
ஶிஷ்யாய ப்ருஹதாம் வக்துஃ ப்ரஸ்தாவமதிஶத்த்ருஶா ॥

ஆதிசேஷனுடைய அந்தமொழியைக்கேட்டுத் திருமால், பிருஹஸ்பதியின் சீடனாகிய இந்திரனுக்குக் கண்ணோக்காலே கட்டளையிட்டனர்.

இதில் ஓரணியும் இல்லாதிருப்பினும், இது முன்பின் உள்ள வாக்கியங்களைத் தொடர்ப்படுத்துவதாய்க் கதைப்போக்கிற்கு உபகாரப்பட்டுநிற்றலால், குற்றமாகாததாயிற்று.

இனி, வாக்கியப்பொருட்குற்றங்கள் விசேடகுணமாமாறு:—

வாக்யாஶ்ரயாணாம் தோஷாணாம் குணீபாவோऽயமீரிதஃ ।
அத வாக்யார்த்ததோஷாணாமதோஷஃ க்வசிதுச்யதே ॥ ॥

இதுகாறும் வாக்கியக்குற்றங்கள் சில இடத்துக் குணமாமாறு கூறப்பட்டது. இனி வாக்கியப்பொருட்குற்றங்கள் சில இடத்துக் குணமாமாறு கூறப்படும்.

### 1. அபார்த்தம்

ஸமுதாயார்த்தஶூந்யம் யத்ததபார்த்தம் ப்ரசக்ஷதே ।
தது(ன்)மத்தமத்தபாலானாமுக்தேரந்யத்ர துஷ்யதி ॥ ௧௩௬ ॥

உட்டொடர்கட்குப் பொருளிருந்தும் பெருந்தொடர்க்குப் பிண்டித்தபொருளின்றி யொழியின் அத்தொடர் 'அபார்த்தம்' என்னும் குற்றமுளதாமென்று கூறுவர் அறிந்தோர். ஆயினும், அது, மதிமயங்கியவர் கூறுவதாகவும் சிறுவர் கூறுவதாகவும் வரும் வழிக் குற்றமாகாது; ஏனைய இடங்களிலே குற்றமாம்.

உதாரணம்:—

க்வாகார்யம் ஶஶலக்ஷ்மண: க்வ ச குலம்
பூயோऽபி த்ருஶ்யேத ஸா
தோஷாணாம் ப்ரஶமாய ந: ஶ்ருதமஹோ
கோபேऽபி காந்தம் முகம் ।
கிம் வக்ஷ்யந்த்யபகல்மஷா: க்ருததியோ
ஸ்வப்நேऽபி ஸா துர்லபா
சேத: ஸ்வாஸ்த்யமுபேஹி க: கலு யுவா
தந்யோऽதரம் தாஸ்யதி ॥

இங்கே, ஒருதலைவியிடம் பெருங்காதல்கொண்ட தலைமகனொருவன் அவளதுநீக்கத்தின்கண் "அவளதுகுலம் எவ்வளவு உயர்ந்தது!; அவள்முகம் கோபங்கொண்ட அமயத்தும் அழகிதாயுள்ளது; குற்றமற்றவர்கள் என்னசொல்லப்போகிறார்களோ; அவளதுபடியே ஒப்பற்றது; மனமே ஆறியிருப்பாயாக; எவனொருவிடலை அவளது அதரத்தைப் பருகப்போகிறானோ;" என்று இவ்வாறு தொடர்பொருளின்றிக் கூறியிருப்பதால் இது 'அபார்த்தம்' என்னும் குற்றமாதற் கேற்புடையதுபோலத்தோன்றினும், காமத்தால் மோஹங்கொண்டு கூறுவதாகக் கூறப்பட்டிருத்தலால் அந்நிலையில் இது குற்றமன்றாயிற்று.

## 2. வியர்த்தம்

யதப்ரயோஜநம் யத்து ததாயம் வ்யர்தமேவ தத் ।
தஸ்யாபி க்வாபி நிர்தோஷ: ப்ரயோகோ ஹர்ஷஶ்யசேதஸா ॥ ॥

பயனற்றசொற்றொடர் வியர்த்தமென்னும் குற்றமாமெனமுன்புகூறப்பட்டது; ஆயினும், அது சிலவிடத்துக் குற்றமாகாது குணமாய்வருவதுண்டு.

உதாரணம்:—

𑌗𑍀𑌤𑌾 𑌵𑌿𑌦𑍁𑌰𑌵𑌾𑌕𑍍𑌯𑌾𑌨𑌿 𑌭𑍀𑌷𑍍𑌮𑍋𑌕𑍍𑌤𑌾𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑌨𑌵𑍇𑌰𑌿𑌤𑌾𑌃 ।
𑌨 𑌶𑍍𑌰𑍁𑌤𑌾 𑌭𑌾𑌰𑌤𑍇 𑌯𑍇𑌨 𑌤𑌸𑍍𑌯 𑌜𑌨𑍍𑌮 𑌨𑌿𑌰𑌰𑍍𑌥𑌕𑌮𑍍 ॥

பாரதத்தில் கீதையும், விதுரன்கூறிய வாக்கியங்களும், வீடுமன்கூறிய தர்மங்களும் எவனால் கேட்டறியப்படவில்லையோ அவன்பிறப்பு வீணானதேயாகும்.

இது, பாரதத்தில் கூறப்படும் கதையுடன் தொடர்பற்றிருப்பினும், பிற சில இதிஹாஸங்கள்போல அறம்பொருளின்பங்களையே மிகுதியாகக்கூறுவது, பாரதம் வீட்டையும் அவற்றோடு தலைமையுடையதாகக் கூறுமியல்பிற்று என்னும் பொருளை விளக்குவதற்காகக் கூறப்பட்டிருப்பதால் பயனுள்ளதெனவேபடும்; 'வியர்த்த' மென்னும் குற்றத்தின்பாற்படாது.

### 3. ஏகார்த்தம்

𑌅𑌵𑌿𑌶𑍇𑌷𑍇𑌣 𑌪𑍂𑌰𑍍𑌵𑍋𑌕𑍍𑌤𑌂 𑌯𑌦𑌿 𑌭𑍂𑌯𑍋𑌽𑌪𑌿 𑌕𑍀𑌰𑍍𑌤𑍍𑌯𑌤𑍇 ।
𑌤𑌦𑍈𑌕𑌾𑌰𑍍𑌥𑌂 𑌰𑌸𑌾𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌤𑌚𑍇𑌤𑌸𑌾𑌂 𑌤𑌨𑍍𑌨 𑌦𑍁𑌷𑍍𑌯𑌤𑌿 ॥ ௧௩௮ ॥

ஒருவகைச்சிறப்புமின்றி முன்கூறப்பட்டதே மறுமுறையும் கூறப்படின் அது 'ஏகார்த்தம்' என்னும் குற்றமாம் என்று முன்பு கூறப்பட்டது. அது ஒரு சுவையால் மறைபட்டுக்கிடப்பின் குற்றமாகாது.

உதாரணம்:—

𑌅𑌸𑌾𑌰𑌂 𑌸𑌂𑌸𑌾𑌰𑌂 𑌪𑌰𑌿𑌮𑍁𑌷𑌿𑌤𑌰𑌤𑍍𑌨𑌂 𑌤𑍍𑌰𑌿𑌭𑍁𑌵𑌨𑌂
𑌨𑌿𑌰𑌾𑌲𑍋𑌕𑌂 𑌲𑍋𑌕𑌂 𑌮𑌰𑌣𑌶𑌰𑌣𑌂 𑌬𑌾𑌨𑍍𑌧𑌵𑌜𑌨𑌮𑍍 ।
𑌅𑌦𑌰𑍍𑌪𑌂 𑌕𑌨𑍍𑌦𑌰𑍍𑌪𑌂 𑌜𑌨𑌨𑌯𑌨𑌨𑌿𑌰𑍍𑌮𑌾𑌣𑌮𑌫𑌲𑌂
𑌜𑌗𑌜𑍍𑌜𑍀𑌰𑍍𑌣𑌾𑌰𑌣𑍍𑌯𑌂 𑌕𑌥𑌮𑌸𑌿 𑌵𑌿𑌧𑌾𑌤𑍁𑌂 𑌵𑍍𑌯𑌵𑌸𑌿𑌤𑌃 ॥

உலகவாழ்க்கையையே சீர்மையற்றதாகவும், மூவுலகத்தையும் இரத்தினத்தை இழந்தனவாகவும், உலகத்தை ஒளியிழந்ததாகவும், உறவினரை மரணமடைதலையே கதியாகக்கொள்பவராகவும், மன்மதனைக் களிப்பற்றவனாகவும், உலகத்தோர்கண்களைப் பயனற்றவையாகவும், உலகமுழுவதையும் புதரடைந்த கானகமாகவும் செய்ய ஏன் (இறத்தற்கு எண்ணி) இம்முயற்சியைச்செய்தாய்?

இங்கே, கூறிய பல உட்டொடர்களுக்கும் கருத்துவகையால் வேறுபாடின்மையின், ஒன்று கூறப்பட்டவாறே அமைந்திருப்ப ஏனையவற்றையும் கூறியிருப்பது பயனற்றதாய் ஏகார்த்தம் (ஒரு பொருளேயுடையது) என்னும் குற்றமாவதுபோலத்தோன்றினும், அவலச்சுவையில் ஆழ்ந்த மனத்தோனொருவன் கூறியதாதலால் குற்றமின்றிக் குணமாயிற்று.

## 4. சசம்சயம்

𑌸𑌂𑌶𑌯𑌾𑌯𑍈𑌵 𑌸𑌂𑌦𑌿𑌗𑍍𑌧𑌂 𑌯𑌦𑌿 𑌜𑌾𑌤𑍁 𑌪𑍍𑌰𑌯𑍁𑌜𑍍𑌯𑌤𑍇 ।

𑌸𑍍𑌯𑌾𑌦𑌲𑌙𑍍𑌕𑌾𑌰 𑌏𑌵𑌾𑌸𑍌 𑌨𑌦𑍋𑌷𑌸𑍍𑌤𑌤𑍍𑌰𑌤𑌦𑍍𑌯𑌥𑌾 ॥ ௧௮௧ ॥

ஐயப்படுமாறுகூறுதலை மேற்கொண்டு கூறுமிடத்து ‘ஸஸம்சயம்’ (ஐயத்திற்கிடனுமாறுகூறுதல்) என்னும் குற்றம் இன்று; மற்று அது அலங்காரமேயாம். அது வருமாறு:—

உதாரணம்:—

𑌪𑌂𑌥𑌿𑌅 𑌣 𑌏𑌤𑍍𑌥 𑌸𑌤𑍍𑌥𑌰𑌕𑌂 𑌅𑌤𑍍𑌥𑌿 𑌮𑌣𑌂 𑌪𑌤𑍍𑌥𑌰𑌤𑍍𑌥𑌲𑍇 𑌗𑌾𑌮𑍇 ।

𑌉𑌣𑍍𑌣𑌅𑌪𑌓𑌹𑌰𑍇 𑌪𑍇𑌕𑍍𑌖𑌿𑌊𑌣 𑌜𑌇 𑌵𑌸𑌸𑌿 𑌤𑌾 𑌵𑌸𑌸𑍁 ॥ ॥

[இளையோனான ஒரு வழிச்செல்வோன் ஓரூரிற் சென்று ஒருத்தியிடம் காதல்கொண்டு கவர்பொருட்சொற்களால் அவள் குறிப்பறியவுறுவானாய், “𑌸𑌤𑍍𑌥𑌰𑌕𑌂” இங்கே கிடைக்குமோ? என்றான். (𑌸𑌤𑍍𑌥𑌰𑌕𑌂 என்பது, 𑌸𑍍𑌰𑌸𑍍𑌤𑌰𑌕𑌂 - பாய்முதலிய விரிப்பு;

ஸஹூரா தம் - மனமமர்ந்த கலவி என்னும் இருபொருளுக்கிடமு யுள்ளது). எனவே அப்பெண்ணும் அவன் குறிப்பறிந்து தன் குறிப்பை அவனுக்கு அறிவுறுத்துவாளாய்க் கவர்பொருள்படும் அச்சொல்லின் பாய் என்னும் பொருளைநீக்கி ஏனைய கலவிப் பொருள் உனக்குக் கிடைக்கும் என்று கூறுகின்றாள். அங்ஙனங் கூறுமவள், பாங்காயினார்க்குத் தெரியாவகை சிலேடைவாய்பாட்டால் கூறுகின்றாள். எனவே இது கருதியே கூறியமை காண்க.]

ஓ வழிப்போக்கனே! இந்தவீட்டில் படுக்கை ஏது? (இல்லை). உயர்ந்த பயோதரங்களைக்கண்டு இங்கே வசிக்கவிரும்பின் வசிப்பாயாக.

இங்கே பயோதரம் எனும் சொல் முலை, மேகம் எனும் இரு பொருளும் பயப்பதாதலால் ஐயத்திற்கிடனாய்க் குற்றமாவதாய்த் தோன்றினும், இது மறைத்துக்கூறுதற்காகக் கூறப்பட்டமையின் குணமாயிற்று.

[தொடரும்]

---

ஸ்ரீ:

# முக்கூடற்பள்ளு

முக்கூடல் என்பது திருநெல்வேலிஜில்லாவில் பொருநைநதியின் வடகரையில் உள்ளதோர் சிற்றூர். பொருநை சித்திராநதி கோதண்டராமநதி என்னும் மூன்றியாறும் இத்தலத்து ஒன்று சேருதலால் இதற்கு முக்கூடல் என்ற பெயர் வழங்கலாயிற்று. மூன்று + கூடல் = முக்கூடல். மூன்று - மூன்றியாறு. கூடல் - கூடுமிடம். முக்கூடற்றலத்துக்குப் பிற்காலத்துச் சீவலப்பேரி என்ற பெயரும் வழங்கலாயிற்று.

பள் என்பது, தமிழ்ப்பிரபந்தவகைகளுள் ஒன்று. இது, புனைந்துரைவகையால் மருதநிலமக்களாகிய மள்ளருள் ஒருதலைவன் தலைவியரிடை நேர்ந்த ஊடல்காரணமாக நிகழ்ந்த செய்திகளை ஒரு நாடகநிகழ்ச்சிபோல விரிக்குமாற்றால் அந்நிலத்துச் சிறப்பெல்லாம் புலப்படுத்துவது.

முக்கூடற்பள்ளென்பது, முக்கூடலென்னுந்தலத்து எழுந்தருளியுள்ள அழகரைப் பாட்டுடைத்தலைவராகவும் அந்நிலத்து மள்ளருள் ஒருவனைக் கிளவித்தலைவனாகவும் கொண்டு, புனைந்துரைவகையால், கிளவித்தலைவனோடு அவன் மனைவியரிடைநேர்ந்த ஊடல்காரணமாக நிகழ்ந்த செய்திகளை விரிக்குமாற்றால் முக்கூடற்றலத்துவளனும் சிறப்பும் முதலியவெல்லாம் விளக்குவது; சொன்னலனும் பொருணலனும் அணிநலனும் கற்பனைநயமும் பிறநலன்களும் அமைய இயன்றது; சென்ற நூற்றாண்டளவும் தமிழ்நாட்டினருட் சிறியரும் பெரியரும் புலவரும் பூவையரும் ஆகிய எல்லாராலும் விரும்பிப் பயிலப்பெற்றது. இவ்வரிய பிரபந்தத்தையியற்றியுதவிய ஆசிரியர்பெயர் முதலியன அறியுமாறில்லை. எனினும், இப்பிரபந்தத்துட் காணப்படும் சிலசெய்யுட்களாலும் குறிப்புக்களாலும் இந்நூலாசிரியர் பரமவைணவர் என்பதும் பதினேழாம்நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவரென்பதும் வெளியாகும்.

பல ஆண்டுகளாகத் தமிழ்மக்களான் மறக்கப்பட்டுத் தன் உருச்சிதைந்து பெயரளவால்மட்டும் கேட்கப்பட்டிருந்த இப்பிரபந்தத்தை அதன் சிறப்பெல்லாந்தோன்றுமாறு நன்கு பரிசோதித்து, விரிந்து பரந்த முகவுரையும் குறிப்புரையும் அமைய ஸ்ரீ. மு. அருணசலம்பிள்ளையவர்கள், எம். ஏ. தமிழ்மக்கட்கு நல்விருந்தாக அச்சிட்டு வழங்கியுள்ளார்கள். இவ்வரியநூலை நன்கு அச்சிட்டுதவிய பிள்ளையவர்களுடைய தமிழ்ப்பற்றும் தமிழ்த்தொண்டும் பாராட்டத்தக்கன.

பலஆண்டுகளாக வழக்கின்றி உருச்சிதைந்துகிடந்த ஒரு நூலைப் புதிதாக ஆராய்ந்து பதித்து வெளியிட்டபின்னும், அந் நூலிற் சிலதிருத்தங்கள் காணப்படுவது இயல்பே. அதனுல் அந் நூலுக்கோ அன்றி அதன் ஆசிரியர்க்கோ அதன் பதிப்பாசிரியர்க்கோ ஒருகுறையும் ஏற்படாதென்பது ஒருதலை. நிற்க.

பிள்ளையவர்கள்பதித்த முக்கூடற்பள்ளைப் படித்துமகிழ்ந்து வந்த யான், அதிற் சிலசெய்யுட்களுக்குப் பொருள்காண்டலில் இடர்ப்பாடுற்று, மதுரைத்தமிழ்ச்சங்கத்தில் உள்ள முக்கூடற்பள்ளேட்டுப் பிரதிகளை*வைத்து ஒப்புநோக்கியபோது பொருளியையுடைய பல பிரதிபேதங்களும் திருத்தங்களும் ஏட்டுப்பிரதியிற் கிடைத்தன. புலமையும் தகுதியும் வாய்ந்த என் நண்பர் சிலரிடம் அவற்றை நான் தெரிவித்தபொழுது அவர்கள் அவற்றையெல்லாம் தொகுத்துச்செந்தமிழ்வாயிலாக வெளியிடுமாறு பணித்தமையால், அவை பிள்ளையவர்கள்பதிப்பைப் படிப்பார்க்கு உபயோகமாகும் என்னும் நன்னேக்குடன் அவற்றை இங்கு வெளியிடுகிறேன். இதிற்காணும் பிழைகளை அறிஞர்கள் பொறுத்தருள்வார்களாக.

ஏட்டுப்பிரதியிற்கண்ட பிரதிபேதங்களும் திருத்தங்களும் வருமாறு:—

---

* சங்கத்தில்உள்ள முக்கூடற்பள்ளேட்டுப்பிரதிகள் இரண்டு. அவற்றுள் ஒன்று பூரணமானது; மிகவும் பிழைபட்டது. மற்றொன்று இடையும் ஈறும் சிதைந்தும் பிறழ்ந்தும் உள்ளது.

அச்சுப்புத்தகத்தின் 2-ஆம் பக்கத்துக் கடவுள்வணக்கத்துள் உபேந்திரனாகிய திருமால் விஷயமான செய்யுளின் 3-ஆம் அடியில், 'துணையென முதற் கூறிய சீரியர்' என்பது ஏட்டுப்பிரதியுள், 'துணையென முதற் கூறிய தேறிய' என்றும், 'சுரர்பதிப்பகைக்கீறுளர் வீறுளர்' என்பது, 'சுரர்பதிபகைக்கீறுளவீறுள' என்றும் உள்ளன. 'கூறிய சீரியர் என்பதனினும், 'கூறியதேறிய' என்பது எதுகைநயமும் பொருட்சிறப்புமுடையதாயிருக்கிறது. கூறிய சுரர்பதி தேறிய சுரர் பதி என இயையும். 'சுரர்பதிப்பகைக் கீறுளர்வீறுளர் என்பதனினும், 'சுரர்பதிபகைக்கீறுள வீறுள' என்பது சிறக்கும். இந்திரன் பகை என்ற பொருளில், சுரர்பதிப்பகையென வருதலன்றிச் 'சுரர் பதிப்பகை' எனப் பகரவொற்றிரட்டிவருதற்கு விதியில்லை. மேலும், சுரர்பதிபகைக் கீறுளர் வீறுளர் என்று பெயரடுக்காக்குவதினும் சுரர்பதிபகைக்கு ஈறு(ள்)ள வீறு(ள்)ள சூரத்துடன் என்று கொள்வது பொருந்துமென்று தோன்றுகின்றது. ஈறுளர் வீறுளர் எனப் பெயரடுக்காக்கின் வீரத்துடனே என்பது இயைபின்றி நின்றுவற்றும். சூரத்துடன், வானவர் தானவர் பணிவிடைசெய, இளமுறைக்கோனென வான் நெறிபாலிப்பவர் அழகர்பள்ளிசைப் பாவளம் நாவளமாகத்தருவோர் என முடியும்.

இனி, இதனுள், 'திருத்தாள்வலி தோள்வலி துணை' யென்பது, பகைவராகிய மாவலி முதலிய அசுரரால் தானுற்ற நலிவுநீக்கியருளத் திருமாலிடம் சரணம்புக்க இந்திரன்கூற்றாதலால் இதற்குத் திருமாலிடம் இந்திரன் சரணம்புக்கபின் நிகழ்ந்த மாவலி நிரசனமும் பிந்திய அவதாரநிகழ்ச்சியாகிய இராவணவதமும் பொருந்துமாறில்லை; எனவே, 'என்பகை நீக்கிக்கோடற்கு என் தாள் வலியும் தோள்வலியும் துணையாகா. எல்லாம்வல்ல நின் திருத்தாள் வலியும் திருத்தோள்வலியுமே துணை'யென்று கூறி இந்திரன் திருமாலிடம் சரணம்புக்கானென்று பொருள்கோடல் பொருந்தியதாகும்.

3-ஆம் பக்கத்துக் கருடன்விஷயமான வாழ்த்துச்செய்யுளின் 3-ஆம் அடியில், 'சோதத்தளைபூரித்தசைய' என்றிருப்பது ஏட்டுப்பிரதியில், 'சோதத்தளை பூரித்தசையை' என்று காணப்படுகிறது. 'அசையை' என்பது முன்னும் பின்னும் உள்ள செய்யுளுறுப்புக்களோடு பொருந்தியமைதல் காணலாம்.

இதனுள், 'தாரத்திருபேர்' என எண்ணுப்பெயராற் கூறிய ஆசிரியர், அவ்விருவர் புவியும் திருவும் எனப் பின்னர் அவர்தம் இயற்பெயரால் விளங்கக்கூறலின், தாரத்திருபேர் என்பதற்குத் 'திருமகளும் நிலமகளும்' என்று பொருள்கொள்ளல் அமைவுடையதாகும்.

3-ஆம் பக்கத்துச் சேனைமுதலியார்விஷயமான வாழ்த்துச் செய்யுளின் முதலடியில், 'பூவைநிறச்சேவையன்' என்றிருப்பது, 'பூவைநிறச் சேவலன்' என்றும், 2-ஆம் அடியுள் 'பாவலனுக் கார்வலன்' என்றிருப்பது, 'பாவலனுக் காவலன்' எனவும், 3-ஆம் அடியுள், 'தாவறு' என்றிருப்பது 'தாவுறு' என்றும், 'தாளவிதத் தேழணி'யென்றிருப்பது, 'தாளவிதத்தோடணி' என்றும், 4-ஆம் அடியுள், 'முடிப்பூவடிப் பிரசம்' என்பது, 'முடிப்பூவடிபிரசம்' என்றும் 'கோலணிவிலகும்என்பது, 'கோலனவிலகும்' என்றும் ஏட்டுப் பிரதியிற் காணப்படுகின்றன. இவற்றுள், 'பாவலனுக்காவலன்' என்பது எதுகைநயமும், 'தாளவிதத்தோடணி' என்பது பொருட் சிறப்புமுடையன. 'பூவடிப்பிரசம்' என்ற பாடத்திற் சந்தம் சிதைகிறது: பொருளும் பொருந்தவில்லை; ஆதலால் சந்தமும் பொருளியைபும் உடைய 'பூவடிபிரசம்' என்ற பாடம் பொருந்துமென்று தோற்றுகிறது. மற்றவையும் இதன் 4-ஆம் அடி முழுமைக்கும் பொருளும் ஆராயத்தக்கன. மூன்றும் அடியில் தாவறு, தாவுறு என்ற பாடத்தினும் 'தாவரு' என்று பாடம் இருப்பிற் சிறக்கும். தா - குற்றம்.

5-ஆம் பக்கம் சடகோபர்விஷயமான வாழ்த்துச்செய்யுளின் 2-ஆம் அடியில் 'அழகர்பள்' என்பது, 'அழகர்தம்' என்றும், 3-ஆம் அடியில் 'பெயர்தருமுயர்தரும்' என்பது, 'பெயர்தருமுயர்தரு' என்றும், 4-ஆம் அடியில் 'நத்தேவக் குருகையில்' என்றிருப்பது, 'நத்தோலக்குருகையில்' என்றும் ஏட்டுப்பிரதியிற் காணப்படுகின்றன. இவற்றுள், 'பெயர்தருமுயர்தரும்' என மகர ஒற்றிருந்த பாடத்தாற் சந்தஞ்சிதைதலின் அவ்வொற்றின்றியுள்ள பாடம் சிறக்கும். 'நத்தேவக்குருகை'யென்ற பாடத்தினும் 'நத்தோலக் குருகை'யென்ற பாடம் அமைவுடையதாகும். சங்கன் தன் பரிஜனங்களுடன் குருகையில்வந்து இறைவனை வணங்கித் துதித்து

முத்திபெற்றவரலாறு குருகைமான்மியத்துக் கேட்கப்படுகிறது. மேலும், இக்காலத்தும் அத்தலத்துப் பொருநைத்துறையொன்றற்குத் திருச்சங்கணித்துறையென்ற பெயர் வழங்குதலும் நோக்கத்தகும். நத்தோலக்குருகை - சங்கிஞெலியுள்ள திருக்குருகூர். இதனை 'நத்தாகக்குருகை'யென்று பாடங்கொண்டாரும் உண்டு. அதற்குப் பொருளோடியைபின்மை வெளிப்படை.

இனி இதன் 4-ஆம் அடியில் 'சுருதியர்' என்பதற்கு வேதியராகிய மதுரகவிகள் என்பது பொருளாகும். சடகோபர் அருளிய பாசுரங்களை மதுரகவிகள் பட்டோலைக்கொண்டனரென்பது குரு பரம்பரையால் விளங்கும்.

6-ஆம் பக்கத்துப் பள்ளியர்வரவுகூறும் முதற்செய்யுளின் 2-ஆம் அடியில் 'ஆசூர்வளநாடு' என்றிருப்பது, 'ஆசூர்வளநாடும்' என்று ஏட்டுப்பிரதியிலுள்ளது. பின் சீவலநன்னாடும் என எண்ணும்மைகொடுத்துக்கூறுதலாலும், அவ்விருநாட்டுவளமும் பேசப்படுதலாலும் முன்னும் ஆசூர்வளநாடும் என எண்ணும்மையோடுள்ள ஏட்டுப்பாடம் பொருந்தியதாகும்.

முக்கூடற்பள்ளிவரவுகூறும் செய்யுளின் முதலடியில், 'கொண்டையும்' என்பது, 'கொண்டை'யென்றும், 4-ஆம் அடியில் 'திருமுக்கூடல் வாய்த்தபள்ளி'யென்பது, 'திருமுக்கூடற்பள்ளி', 'திருமுக்கூடலிற் பள்ளி' என்றும் ஏட்டுப்பிரதியில் உள்ளன. 'திருமுக்கூடல்வாய்த்தபள்ளி' யென்பதில் 'வாய்த்த' வென்பது மிகையாய்த் தோற்றுகிறது.

8-ஆம் பக்கத்துள்ள இளையபள்ளிவரவுகூறுஞ்செய்யுளின் 4-ஆம் அடியில், 'பூம்பட்டும்' என்பது, 'தரும்பட்டும்' என்றும், 'பஞ்சவர்ணத் தழகுந்துலங்க' என்பது, 'பஞ்சவர்ணத் தழகுமிலங்க' என்றும் ஏட்டுப்பிரதியில் உள்ளன.

பள்ளன்வரவுகூறும் 10-ஆம் செய்யுளின் முதலடியில் 'வர்ணக் கன்னப்பரிசும் என்றிருப்பினும், வன்னக்கன்னப்பரிசும்' என்று ஏட்டிற்கண்டபாடம், எதுகைச்சிறப்புடையதாயிருக்கிறது. 4-ஆம் அடியில், 'வடிவழகக்குடும்பன் வந்துதோன்றினனே' என்றிருப்பது ஏட்டிலுள்ளவாறு, 'வடிவழகக்குடும்பன் தோன்றினனே' என்றிருக்கலாம். இங்கு வந்து என்பது மிகையாகும்.

9-ஆம் பக்கம் பள்ளன் தன்பெருமைகூறும் செய்யுளின் 2-ஆம் அடியில், 'சுருதியெண்ணெழுத்துண்மைப் பெரியநம்பியைத் தோழாத்துட்டர்' என்பது, 'சுருதியெண்ணெழுத்துண்மை பெரிய நம்பியைக் கேளாத் துட்டர்' என்று ஏட்டிற் காணப்படுகிறது. இச்செய்யுள் திருமால்பத்தியில்லாதாருடைய மனமும் செவியும் காலும் ஆகிய உறுப்புக்களை, அவற்றின்குற்றம் விளங்கக்கூறித் தண்டிப்பேன் என்று பள்ளன்பேசுவதாக அமைந்தது. அம்முறையில் முதலடியில் திருமாலைத் தியானியாமை மனத்தின் குற்றமாகவும் மூன்றாமடியில் திருமால்தலங்களை வலஞ்செய்யாமை கால்களின் குற்றமாகவும் கூறியதுபோல, இரண்டாமடியிலும் பெரியநம்பியென்னும் குருவினிடம் திருமந்திரார்த்தம் கேளாமை செவியின்குற்றமாக வெளியிடும் ஏட்டுப்பாடம் சிறந்ததாயும் பொருட்பொருத்தமுடையதாயும் இருக்கிறது. அன்றியும் பெரியநம்பியை, 'சுருதியெண்ணெழுத்துண்மைப் பெரியநம்பி' என அடைமொழியாற் கூறுவது இயைபுடையதாயும் இல்லை. இன்னும் இச்செய்யுளின் 3-ஆம் அடியில் 'பேய்க்காலில் வடம்பூட்டி யேர்க்கால் சேர்ப்பேன்' என்றிருப்பதினும், 'பேய்க்காலை வடம்பூட்டி யேர்க்கால் செய்வேன்' என்று ஏட்டிற் காணப்படும் பாடம் சிறக்கும்.

10-ஆம் பக்கத்துப் பள்ளியர்குடித்தரங்கூறும் முதற்செய்யுளின் முதலடியில் 'மள்ளர்குலத்தில்' என்றுள்ள அச்சுப்பாடத்தினும், எதுகைக்கியைய 'மள்ளக்குலத்தில்' என்று ஏட்டுப்பிரதியிலுள்ள பாடம் பொருத்தமுடைத்து.

10-ஆம் பக்கம் மூத்தபள்ளி தன் குடித்தரங்கூறுஞ்செய்யுளின் முதலடியில் 'சித்திரநதிக்குத் தென்பால்' என்றிருப்பது, 'சித்திரநதியுந் தென்பால்' என்று ஏட்டுச்சுவடியில் உள்ளது. 'சித்திரநதிக்குத் தென்பால் ஓடும் பொருநையுடன் கூடும்போதே' என்ற புத்தகப்பாடம் சித்திரநதிக்குத் தெற்கே ஓடும் பொருநையாற்றுடன் கலந்த காலத்திலே என்று பொருள்தரும். இப்பாடத்தால் பொருநை நதியுடன் கலந்த நதி யெதுவென்பது புலப்படாது. ஏட்டுப்பாடம் சித்திரநதியானது தனக்குத் தெற்கே ஓடும் பொருநையுடன் கலந்தகாலத்திலே என்னும் பொருளுடையதாய்ப் பொருநையுடன் கலந்தநதி சித்திரநதியென்று விளக்கிநிற்றலால், அது,பொருந்துவதாகும்.

இச்செய்யுளின் 2-ஆம் அடியில், 'அடியடிவாழையாய் நான் குடியில் வந்தேன்' என்றிருப்பது, ஏட்டில், 'அடியடிவாழையானகுடியில் வந்தேன்' என்று காணப்படுகிறது. இவ்வடியாற் பள்ளி தொன்றுதொட்டு இடையறாதுவரும் தன் குடிப்பெருமை கூறுகின்றாளாதலின் அதற்கியைய 'அடியடிவாழையானகுடி' என்றுள்ள ஏட்டுப்பாடம் பொருட்சிறப்புடைத்து. 'வாழையடிவாழையென வந்த திருக்கூட்டமர'பென்பதும் இங்கு நோக்கத்தகும்.

11-ஆம் பக்கத்துத் தொடங்கும் இளையபள்ளி தன் குடித்தரங் கூறுஞ்செய்யுளின் மூன்றாம் அடியில், 'தஞ்சைப்பள்ளனுக்' கென்றிருப்பது, 'தஞ்சப்பள்ளனுக்'கென்று ஏட்டுப்பிரதியிற் காணப்படுகிறது.

13-ஆம் பக்கத்துள்ள, பள்ளன் தன் குடித்தரங்கூறும் 16-ஆஞ் செய்யுளின் 2-ஆம் அடியில் 'விட்டுணுவான' என்றிருப்பது, 'விட்டுவான' என்று ஏட்டிற் காணப்படுகிறது. விட்டுணு என்ற பாடத்தாற் சந்தஞ்சிதைதலின் சந்தச்சிதைவில்லாத 'விட்டுவான' என்ற பாடம் அமைவுடையதாகும். விட்டு - விட்டுணு - திருமால். 'வல்லன் எம்பிரான் விட்டுவே'* என்பது இங்கு நோக்கத்தகும்.

13-ஆம் பக்கத்துள்ள நாட்டுவளங்கூறும் கலிப்பாவின் முதலடியில், 'கோட்டுவளம்கூறிய' என்றிருப்பது, 'கோட்டுவளம்கூவிய' என்று ஏட்டுப்பிரதியில் உள்ளது. இப்பாட்டின் பின்னிரண்டடிப் பொருள் நன்கு விளங்கவில்லை.

14-ஆம் பக்கம் மூத்தபள்ளி நாட்டுவளங்கூறும் 17-ஆம் பாட்டின் முதலடியில், 'மயிலெட்டிப்பார்க்கும்' என்றிருப்பது, 'மயிலெட்டிப்பார்க்க' என்றும், 2-ஆம் அடியில், 'வாய்தனை' என்றிருப்பது, 'வாயினை' என்றும், 3-ஆம் அடியில், 'கொண்டல்குறுந்துளி' என்றிருப்பது, 'கொண்டற்குறுந்துளி' என்றும், 4-ஆம் அடியில், 'களிகூரும்' என்றிருப்பது, 'களிகூர்வது' என்றும் ஏட்டில் உள்ளன. இவற்றுள், முதலடியில், 'பார்க்கும்' என்ற பாடத்தினும் 'பார்க்க' என்ற ஏட்டுப்பாடம், ஏனையடிகளிலுள்ள 'மூட', 'வர'

* திருவாய்மொழி. 2. 7. 4.

என்ற எச்சங்களுடன் இயைபுடையதாயும் பொருட்பொருத்த முடையதாயும் இருக்கிறது. எட்டிற்கண்ட ஏனைய பிரதிபேதங்களும் அமைவுடையனவாகும். மயில் எட்டிப்பார்க்க, குயில் வாய் (பேசாமல்)மூட, கொண்டற்குறுந்துளியோடே வாடைஓடிவர ஆசூர்வடகரைநாடு மகிழ்கூர்வது: என இயையும்.

14-ஆம் பக்கம் இளையபள்ளி நாட்டுவளங்கூறும் கஅ-ஆம் பாட்டின் முதலடியில், வேயிருவேழங்கூடி' என்றிருப்பது, 'வேளிரு வேழங்கூடி' என்றும், 2-ஆம் அடியில்'குன்றேலாந்தரமில்லை'யென் றிருப்பது, 'குன்றிலாதரவில்லை'யென்றும், 3, 4 அடிகளில்,'சொல்லி தென்றலோடிவரக்களிகூரும்சீவலமங்கை' என்றிருப்பது, 'சொல்லித் தென்றலோடிவரக் களிகூர்வது சீவலார்மங்கை'* என்றும் எட்டில் உள்ளன. எட்டுப்பாடங்கள் புத்தகப்பாடங்களினும் பொருட் சிறப்பும் அமைவுமுடையனவாகத் தோன்றுகின்றன.

15-ஆம் பக்கம் 19-ஆம் செய்யுளின் 2-ஆம் அடியிலுள்ள 'கண்டபேரண்டம்' என்பதற்கு, கண்டபேரண்டமென்னும் புள்: என்று பொருள்கொள்ளல்தகும்; பேரண்டம் என ஒருபுட்குப் பெயர்வழக்கின்மையின்.

17-ஆம் பக்கம் 24-ஆம் செய்யுளின் முதலடியில், 'முத்தம் அடைக்கும் சாலைவாய்க்கன்னல்' என்றிருப்பது, 'முத்தமடைக்கு மோண் சாலிவாய்க்கன்னல்', அல்லது 'முத்தமடைக்குமோண் சாறுவாய்கன்னல்' என்றும், 3-ஆம் அடியில் 'சாறுபர்' என்றிருப் பது, 'சாறயர்' என்றும், 'கிடக்கும்' என்றிருப்பது, 'கிடைக்கும்' என்றும் எட்டில் உள்ளன. இவற்றுள், 'சாலைவாய்க்கன்னல்' என்ற பாடத்தினும் எட்டுப்பாடம் சிறக்கும். 'கிடக்கும்' என்றிருப்பது எட்டிலுள்ளவாறு 'கிடைக்கும்' என்றிருப்பின் எதுகைநயமும் உடையதாகும்.

17-ஆம் பக்கம் 25-ஆம் பாட்டின் 2-ஆம் அடியில் 'தூங்கும்' என்றிருப்பது, எட்டிலுள்ளவாறு 'தூக்கும்'என்றிருப்பிற் சிறக்கும். அடுத்த அடியிற் சாய்க்கும் என்றிருப்பதும் நோக்கத்தகும்.

---

* இவ்விடத்துமட்டுமன்றிப் பின்னும் 'சீவலமங்கை'யென வருமிடங் களிலும், 'சீவலார்மங்கை'யென்று எட்டிற் காணப்படுகிறது.

18-ஆம் பக்கம் 26-ஆம் செய்யுளின் முதலடியில், 'இஞ்சியின் பார்சடை' என்றிருப்பது, ஏட்டிலுள்ளவாறு 'இஞ்சியின் பாசடை' என்றிருப்பிற் பொருந்தும். இஞ்சியின்பாசடையென்பது இஞ்சியின் பசியஇலை யென்று பொருள்படும்.

18-ஆம் பக்கம் 27-ஆம் பாட்டின் 3-4 ஆம் அடியில், 'பூங் குயிலைக்கூவாய்' என்றிருப்பது, ஏட்டிலுள்ளபடி 'பூங்குயிலேகூவாய்' என்றிருப்பிற் சிறக்கும்.

20-ஆம் பக்கம் 29-ஆம் பாட்டின் 3-ஆம் அடியில், 'தழைக்க வே' என்றிருப்பது ஏட்டிலுள்ளவாறே 'தழையவே' என்றிருப்பின் ஓசையின்பமும் உடையதாகும். இதன் 4-ஆம் அடியில் 'கட்டளை கள் தழைக்கவே' என்றிருப்பது 'கருணைபெறவேண்டியே' என்று ஏட்டிற் காணப்படுகிறது.

20-ஆம் பக்கம் 30-ஆம் செய்யுளின் 2-ஆம் அடியில் 'அய்யங் கார்' என்றிருப்பது, 'ஐயங்கார்' என்றிருக்கவேண்டும். 4-ஆம் அடியில் 'கற்பகாலங்கள்' என்றிருப்பது, ஏட்டிலுள்ளபடி 'கற்பகால மும்' என்றிருப்பின் ஓசையின்பமும் உடையதாகும்.

21-ஆம் பக்கம் 33-ஆம் பாட்டின் முதலடியில் 'சேவற்சாத் திரத்தாலே' என்றிருப்பது, ஏட்டிலுள்ளவாறு 'சேவல் சாத்திரத் தாலே' என்றிருப்பின் பொருளமைவுடையதாகும். 'சேவலைச் சாத் திரத்திற் கூறியமுறைப்படி' (பலியிடும்) என்பது இதன்பொருள். இதன் 2-ஆம் அடியில், 'சாராயமும் பனையூற்றுக்கள்ளும்' என்றிருப் பது, 'சாறுயமுஞ்சாணுத்திகள்ளும்' 'சாறுயமும் வெறியார்த்தகள்ளும்' என்று ஏட்டிற் காணப்படுகிறது.

22-ஆம் பக்கம் 34-ஆம் பாட்டின் 2-ஆம் அடியில், 'பட்சேரி என்றிருப்பது, 'பச்சேறி' என்றும், 3-ஆம் அடியில் 'புத்தியுடன் என்றிருப்பது, 'புத்தியோடு' எனவும், 4-ஆம் அடியில் 'பெய்யமழை' என்றிருப்பது, 'பெய்யுமழை' என்றும் ஏட்டில் உள்ளன. இவற் றுள் 'பச்சேறி'யென்பது வழக்குவழிப்பட்டது. 'புத்தியோடு' என் பது இன்னோசையுடையது. பெய்யுமழை'யென்பது பொருட் பொருத்தமுடையது.

23-ஆம் பக்கம் 35-ஆம் செய்யுளின் 3-ஆம் அடியில் 'சேற்றில்வளை ஏற்றடைக்குதே' என்றிருப்பது, ஏட்டில், 'சேற்றைக் குழைத்தேற்றடைக்குது', 'சேற்றைக்கிள்ளி யேற்றடைக்குது' என்று காணப்படுகிறது. ஏட்டுப்பாடமே கன்னபாரம்பரையிலும் வழங்கி வருவது.

24-ஆம் பக்கம் 36-ஆம் பாட்டின் 3-ஆம் அடியில், பக்கமேயுஞ் சூழ்கம்புஞ்சுருக்கவாங்கிடும்' என்றிருப்பது, ஏட்டிலுள்ளபடி 'பக்கமே யூசிக்கம்புஞ் சூழ்கள் வாங்கிடும்' என்றிருக்கலாமென்று தோன்றுகிறது.

24-ஆம் பக்கம் 37-ஆம் பாட்டின் 2-ஆம் அடியில், 'மாலாசூர் நன்னாட்டில்' என்றிருப்பது, ஏட்டிலுள்ளவாறு 'மாலாசூர்நாட்டில்' என்றிருப்பின் ஓசைநயமுடையதாகும்.

25-ஆம் பக்கம் 38-ஆம் பாட்டின் 4-ஆம் அடியில், 'குளிருகின்றது' என்றிருப்பது ஏட்டில் 'குளிறுகின்றது' என்றுள்ளது. ஏட்டுப்பாடம் எதுகைநயமும் பொருட்சிறப்பும் உடையது. குளிறுதல் - ஆரவாரித்தல். இன்னும் இவ்வடியில் 'கோன்கழுத்தினில்' என்றிருப்பது, 'கோன்களிற்றினில்' என்றிருக்கவேண்டுமென்று தோன்றுகிறது. கோன்களிறு - இந்திரனுடைய யானையாகிய அயிராவதம்.

26-ஆம் பக்கம் 40-ஆம் பாட்டின் முதலடியில், 'பரிசுகொள்ளலாய்' என்றிருப்பது பரிசில்கொள்ளலாய்' என்றிருப்பின் எதுகைநயமும் உடையதாகும்.

29-ஆம் பக்கம் 46-ஆம் பாட்டின் முதலடியில், 'பகட்டுக் கமலக்குட்டத்தில்' என்பதற்கு 'எருமைக்கடாக்களோடுகூடிய தாமரைக்குளத்தில்' என்றும், 3-ஆம் அடியில் 'வாழைப்பெரிய முதலே' என்பதற்கு 'வாழையின் பெரிய அடிமரத்தை' என்றும் பொருள்கொள்ளலாம்.

[தொடரும்]

T. K. இராமானுஜையங்கார்,

உதவிப்பத்திராசிரியர்.

## II. செந்தமிழ்ப்பிரசுரம்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | ஐந்திணையைம்பது (உரையுடன்) ... ... | 0 | 4 | 0 |
| 2. | கணநூல் (5) இனியதுநாற்பது (உரையுடன்) ... | 0 | 3 | 0 |
| 3. | *வளையாபதிச்செய்யுட்கள் ... ... ... | | | |
| 4. | புலவராற்றுப்படை ... ... ... | 0 | 3 | 0 |
| 6. | *நேமிநாதம் (உரையுடன்) ... ... ... | | | |
| 7. | திருநூற்றந்தாதி (உரையுடன்) ... ... | 0 | 6 | 0 |
| 8. | திணைமாலைநூற்றைம்பது (உரையுடன்) ... | 0 | 8 | 0 |
| 9. | அநுமானவிளக்கம் ... ... ... | 0 | 10 | 0 |
| 10. | அட்டாங்கயோகக்குறள் ... ... ... | 0 | 2 | 0 |
| 11. | *விவசாயரசாயன சாஸ்திரச்சுருக்கம் ... ... | | | |
| 12. | *பன்னிருபாட்டியல் ... ... ... | | | |
| 13. | நான்மணிக்கடிகை (பழைய உரை) ... ... | 0 | 4 | 0 |
| 14. | முத்தொள்ளாயிரச்செய்யுட்கள் ... ... | 0 | 3 | 0 |
| 15. | திருச்செந்திற்கலம்பகம் ... ... ... | 0 | 3 | 0 |
| 16. | திருவாரூருலா ... ... ... | 0 | 8 | 0 |
| 17. | சுகசந்தர்சனதீபிகை ... ... ... | 0 | 12 | 0 |
| 18. | இயற்கைப்பொருட்பாடம்... ... ... | 0 | 4 | 0 |
| 19. | தேவையுலா ... ... ... ... | 0 | 3 | 0 |
| 20. | ஹரிவிருத்தம் ... ... ... ... | 0 | 2 | 0 |
| 21. | சிதம்பரப்பாட்டியல் (உரையுடன்) ... ... | 0 | 8 | 0 |
| 22. | *திருக்கலம்பகம் (ஷை) ... ... | | | |
| 23. | *விக்கிரமசோழனுலா ... ... ... | | | |
| 24. | குருமொழிவினவிடை ... ... ... | 0 | 1 | 0 |
| 25. | கேசவப்பெருமாள் இரட்டைமணிமாலை... ... | 0 | 2 | 0 |
| 26. | திருத்தணிகைத்திருவிருத்தம் ... ... | 0 | 1 | 0 |
| 27. | மதுரைத்திருப்பணிமாலை... ... ... | 0 | 8 | 0 |
| 28. | *சந்திராலோகம் ... ... ... | | | |
| 29. | *சோழவம்சசரித்திரச்சுருக்கம் ... ... | | | |
| 30. | ஞானாமிர்தக்கட்டளை ... ... ... | 0 | 3 | 0 |
| 31. | பாண்டியம் ... ... ... ... | 0 | 4 | 0 |
| 32. | மநீஷாபஞ்சகம் ... ... ... | 0 | 8 | 0 |
| 33. | வேளிர்வரலாறு ... ... ... | 0 | 8 | 0 |
| 34. | அகப்பொருள்விளக்கம் ... ... ... | 1 | 4 | 0 |
| 35. | *திருமந்திரநூறுபாட்டுக்குரை ... ... | | | |
| 36. | உவமானசங்கிரகம் ... ... ... | 0 | 1 | 0 |
| 37. | மாறனலங்காரம் மூலமும் உரையும் ... ... | 4 | 8 | 0 |
| 38. | திருப்புல்லாணிமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 39. | *பழமொழி மூலமும் பழையஉரையும் (முதல் 100 செய்) | | | |
| 40. | திருமாலிருஞ்சோலைமலை அழகர்பிள்ளைத்தமிழ் ... | 0 | 8 | 0 |
| 41. | பொருட்டொகைநிகண்டு ... ... ... | 0 | 6 | 0 |
| 42. | அகராதிநிகண்டு ... ... ... | 0 | 12 | 0 |

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 43. | மேகவிடுதூது ... ... ... | 0 | 2 | 0 |
| 44. | திருக்குற்றாலமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 45. | தண்டலையார்சதகம் ... ... ... | 0 | 4 | 0 |
| 46. | இராமோதந்தம் ... ... ... | 0 | 3 | 0 |
| 47. | பழமொழிமூலமும் பழைய உரையும் (2-வது 100செய்) | 1 | 0 | 0 |
| 48. | சேதுநாடும் தமிழும் ... ... ... | 0 | 6 | 0 |
| 49. | *கடைவள்ளலார்காலம் ... ... ... | | | |
| 50. | தமிழரும் ஆந்திரரும் ... ... ... | 0 | 4 | 0 |
| 51. | மதங்கசூளாமணி ... ... ... | 1 | 0 | 0 |
| 52. | கூடற்புராணம் ... ... ... | 0 | 10 | 0 |
| 53. | திருவள்ளுவர் (தமிழ்) ... ... ... | 0 | 6 | 0 |
| | ஷை (ஆங்கிலம்) ... ... ... | 0 | 6 | 0 |
| 54. | அரும்பொருள்விளக்கநிகண்டு ... | 1 | 4 | 0 |
| 55. | மாறனகப்பொருளும் திருப்பதிக்கோவையும் ... | 0 | 12 | 0 |
| 56. | பாப்பாவினம் ... ... ... | 0 | 10 | 0 |
| 57. | மதுரைமும்மணிக்கோவை ... ... ... | 0 | 5 | 0 |
| 58. | பழனிப் பிள்ளைத்தமிழ் ... ... ... | 0 | 3 | 0 |
| 59. | கடம்பர்கோயில் உலா ... ... ... | 0 | 6 | 0 |
| 60. | சங்கரநயினார்கோயில்அந்தாதி ... ... | 0 | 6 | 0 |
| 61. | கலைசைக்கோவை ... ... ... | 0 | 12 | 0 |
| 62. | பெருந்தொகை ... ... ... | 5 | 0 | 0 |
| 63. | சூடிக்கொடுத்தநாய்ச்சியார்தோத்திரப்பாமாலை ... | 0 | 5 | 0 |
| 64. | சிராமலைக்கோவை ... ... ... | 0 | 12 | 0 |
| 65. | மத்யமவியாயோகம் ... ... ... | 0 | 2 | 0 |
| 66. | சந்திரகுப்தன் ... ... ... | 0 | 6 | 0 |
| 67. | அமிர்தரஞ்ஜநி ... ... ... | 0 | 2 | 0 |

* இவ்வடையாளமிடப்பட்டவை இப்போது கைவசமில்லை.

குறிப்பு:-1. சங்கத்தினின்று மாதமொருமுறை அரிய பெரிய விஷயங்களைக்கொண்டுவெளியாகிவரும் இச்"செந்தமிழ்"ப்பத்திரிகைக்கு வருஷச்சந்தா ரூ. 4. தனிப்பிரதியின் கிரயம் அணா 8. வெளிநாடுகளுக்கு வருஷச்சந்தா ரூ. 4—8—0. இதுவரை 37 தொகுதிகள் பூர்த்தியாயிருக்கின்றன. இவற்றுள் 1, 2, 3, 7, 8, 9, 10, 16-ம் தொகுதிகள் கைவசமில்லை. பைண்டு செய்யப்பெறாததொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ. 4—0—0-வீதமும், பைண்டு செய்யப்பெற்ற தொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ. 4—12—0 வீதமும் விற்கப்பெறும். வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

2. சங்கப்பிரசுரம், செந்தமிழ்ப்பிரசுரம், செந்தமிழ் முழுத்தொகுதி—இவற்றுள் ஒவ்வொருபுத்தகத்திலும் ஒரேதடவையில் 10 பிரதிகளும் அதற்கு மேற்பட்டும் வாங்குவோர்கட்கு மொத்தக்கிரயத்தொகையில் 100க்கு 10 வீதம் கமிஷன் தள்ளிக்கொடுக்கப்படும்.

3. சங்கப்பதிப்புப்புத்தகங்களை, ஒரு ரூபாய்க்கும் அதற்கு மேற்பட்டும் வாங்குவோர்கட்கு, ரூபா ஒன்றுக்கு அரை அணா வீதம் கமிஷன் தள்ளிக்கொடுக்கப்படும்.

லக்ஷ்மீநாராயணையர், மானேஜர்.